


# பிரேம்சந்த்

பிரகாஷ் சந்திர குப்தா



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

நாற்பதாண்டுகளுக்கு முன் இந்திய நாவலாசிரியர்களின் கவனமெல்லாம் சமூக மாறுபாடு பற்றியே இருந்தது. காந்தியத்திற்கும் சோஷலிஸத்திற்கும் இடையே எத்தனையோ ரகமான சீர் திருத்தங்களையும் புரட்சிகளையும் படைப்பு எழுத்தாளர்கள் பரிந்துரைத் தனர். இவர்களில் ஹிந்தியிலும் உர்து விலும் பிரேம்சந்த் தனிப்பெரும் படைப் பாளராகச் சிறந்து விளங்குகிறார். அந்த அளவுக்கு இவரது நாவல்களும் கதைகளும் இந்தியக் கிராமவாசியின் அவலவாழ்வை உருக்கத்துடன் தத்ரூப மாகச் சித்திரிக்கின்றன.

வறுமையையும் அநியாயத்தையும் எதிர்த்துப் போராடிப் பயின்று பண் பட்ட இவர், தமது பன்னிரண்டு நாவல்களுக்கும் முன்னூறு கதைகளுக் கும் தமது அனுபவங்களையே மூலப் பொருளாக்கினார். இவர் வாழ்ந்து பணியாற்றிய வட இந்தியப் பிரதேச வாழ்வைக் கூர்ந்து கவனித்துத் தமது படைப்பில் வடித்துள்ளார். இவர் டால்ஸ்டாய், கால்ஸ்வொர்தி, ஸாடி, மாப்பாஸன் படைப்புகளை ஹிந்தியில் மொழிபெயர்த்துள்ளார். டிக்கின்ஸை நன்கு படித்தவர்; கார்க்கியைப் போற்றியவர்; இவரே ஹிந்தி இலக்கி யத்திற்கு ஒரு கார்க்கி என்று புகழப் பெற்றுள்ளார். ஆரம்பகாலத்தில் இவர் எழுதியதெல்லாம் உர்துவில்தான். இவரது நாவல் 'கோதான்' தற்காலச் சிறந்த படைப்புகளில் ஒன்றாகப் போற் றப்படுகிறது.

இந்தச் சிறப்புநூலை இயற்றிய பேரா சிரியர் பிரகாஷ் சந்திர குப்தா புகழ் பெற்ற விமரிசகர்; முற்போக்குக் கருத்துக்கொண்டவர். பிரேம்சந்தின் வாழ்வைக் கூறும் வகையிலேயே, அவரது திறமையும் இலக்கிய முயற்சி களும் எங்ஙனம் தோன்றி, எவ்வாறு விரிந்தன என்பதையெல்லாம் தெளி வாக, சுவையாக விவரிக்கிறார்.

முகப்பு ஓவியம் : சத்யஜித் ரே.

உருவ ஓவியம் : சியாமல் ஸேன்.

விலை ரூ. 2-50

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பிரேம்சந்த்

ஆசிரியர் :
பிரகாஷ் சந்திர குப்தா

தமிழாக்கம் :
சரஸ்வதி ராம்நாத்



சாகித்திய அக்காதெமி
புது தில்லி

# 1

1880-இல் துவங்கிய பிரேம்சந்த் யுகம் 1936-இல் முடிவடைந்தது. இந்திய நாட்டு வரலாற்றில் இக்காலப் பகுதி பெருமளவு சிறப்புப் பெற்றதாகும். நாட்டிலே மூண்டிருந்த விடுதலைப் போராட்டம் வலுவடைந்து, முக்கியத்துவம் பெற்றிருந்தது. இந்திய தேசீய காங்கிரஸ் மிதவாதப் போக்குடைய தலைவர்களால் உருவாக்கப்பட்டிருந்தாலும் மெல்ல மெல்ல அக்காலத்தில் தீவிரவாதியாகக் கருதப்பட்ட காந்தியடிகளின் செல்வாக்கிற்கு உட்பட்டிருந்தது. காந்தியடிகள், வலிமை மிகுந்த ஆங்கில அரசிற்கு எதிராக மக்கள் திரண்டெழுந்து விடுதலைக்காகப் போராடவேண்டும் என விரும்பியதின் நோக்கம், மக்கள் தங்களது மெத்தத்தனமான போக்கையும், சுகபோக வாழ்வையும் உதறிவிட்டு, இன்னல்களையும், சிறைவாசத்தையும் எதிர்நோக்கத் தயாராக இருக்கவேண்டும் என்பதுதான். 1936-இல் பிரேம்சந்த் காலமான சமயத்தில் காந்தியடிகளின் அரசியல் கொள்கையில் தீவிரமின்மையும், மிதவாதப் போக்கும் தென்படத் துவங்கி விட்டது. சமதர்ம நோக்கில், அரசியல், பொருளாதார விடுதலையை வலியுறுத்தும் பல தீவிரவாதிகள் அரங்கிலே தோன்றிவிட்டனர். பண்டித நேருவும் மற்றும் இடதுசாரிக் குழுவினரும், ஏனைய கட்சியினரும் இதில் அடங்கியவர்கள்.

எழுத்தைத் தம் பணியாகக் கொண்டிருந்த பிரேம்சந்த் முடிவுவரை தேசீய எழுச்சியுடன் ஒன்றிநின்றார். கோகலே போன்ற மிதவாதத் தலைவர்கள் காங்கிரஸில் செல்வாக்குப் பெற்றிருந்தபோது, பிரேம்சந்த் காந்தியடிகளைச் சார்ந்து நின்ற தீவிரவாதியாக இருந்தார். பின்னாளில் இவர் பாட்டாளி மக்கள், குடியானவர்களின் பொருளாதார விடுதலை பற்றித் தீவிரமாக சிந்திக்கத் துவங்கிய காலத்தில் காந்தியடிகளைவிட நேருவைத்தான் அதிகம் சார்ந்துநின்றார்.

1857—புரட்சிக்குப் பின்னர் இந்தியாவில் நவீன சகாப்தம் தோன்றியதென்றாலும் இதன் முன்னேற்றம் சிரமங்கள் நிறைந்த, மெதுவான முன்னேற்றமாகத்தான் இருந்தது. இடைக்காலத்துப் பிற்போக்கு சக்திகள் அதனைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டிருந்தன. புகை வண்டிகள், தபால் தந்தி வசதிகள், நீர்க்

தொழிற்சாலைகள், கல்வி நிலையங்கள், மேனாட்டு விஞ்ஞான வளர்ச்சி.... போன்றவை இந்தியாவிற்கு புதியதொரு கண்ணோட்டத்தை, புதியதொரு காட்சியைத் தந்தன. கிராமப்புறங்களில் வழக்கிலிருந்த நிலப்பிரபுத்வமுறை, சாதி வேறுபாடுகள், தீண்டாமை, நகர்புறங்களில் இருந்த இன, சாதி பாகுபாடுகள், நாட்டின் முன்னேற்றப் பாதையில் பெரும்தடையாக இருந்தன, பிரேம் சந்தின் படைப்புகள் இந்திய வாழ்விலிருந்த இந்தப் பல்வேறு முரண்பாடுகளையும், பிற்போக்குச் சக்திகளின் பாதிப்புகளையும் உள்ளது உள்ளபடி சித்தரிக்கின்றன.

மேற்கத்திய நாகரிகத்தின் வாழ்க்கை முறைகளையும், அமைப்புகளையும், அடிமைத்தனமான போக்கில் பின்பற்றுவதை பிரேம்சந்த் ஆதரிக்கவில்லை. இந்தியநாட்டு மண்ணின்பால் ஆழ்ந்த பற்றும், பாசமும் கொண்ட உண்மைப் புதல்வராக அவர் விளங்கினார். அவர் நம் இலக்கியத்தில் இந்தியக் குடியானவர்களின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டிய மாபெரும் இலக்கிய கர்த்தா. மேலைநாட்டுக் கல்வி அறிவால் தங்களை உயர்வாக நினைத்துக் கொண்டிருந்த படித்தவர்க்கத்தினரிடமிருந்து, அவர் வேறுபட்டு நின்றார். பிரேம்சந்திடம் இயல்பிலேயே பிறந்த மண்ணின் மாண்பும் மிகுந்திருந்தது.

தாகுரின் இலக்கியப் பாரம்பரியத்தை பிரேம்சந்த் சமதர்ம நோக்கில் விரிவுபடுத்தினார் எனக் கூறலாம். தாம் வாழ்ந்த காலத்தின் அவசரத் தேவையை உணர்ந்து சமதர்ம நோக்கிலே அவர் தீவிரத்தைப் புகுந்தினார். தாகுருடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, பிரேம்சந்த், தாகுரைவிட, மண்ணில் வாழ்பவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டவராகக் காணப்படுகிறார். இந்தியப் பண்பாட்டின் மகத்தான பாரம்பரியத்தை ஊடுருவிப் பார்க்கும் ஆத்மிகக் கண்ணோட்டத்தை, தாகுரைப் போல் அவர் பெற்றிராத போதிலும் விஞ்ஞான முன்னேற்றம் மற்றும் முற்போக்கான உலகக் கண்ணோட்டத்தினால் விளைந்த புதிய கருத்துகளுடன் அவர் இணைந்து நிற்பதைக் காணமுடிகிறது. இந்தியக் கலாசாரத்தின் வளர்ச்சியில் முகமதியர்களின் பங்குபற்றித் தாம் கொண்டிருந்த கருத்தில் அவர் உண்மையும், உறுதியும், எவ்வித மதச் சார்பும் அற்றவராகவும் இருந்தார்.

இந்திய மண்ணில் மிக விரைவாக வளர்ந்து வந்த தொழில் வளத்தை அவர் எதிர்த்தார். ஆலைகள், தொழிற்கூடங்களின் வளர்ச்சியினால் மண்ணை நம்பி வாழும் குடியானவர்களின் நிலங்கள் பறிமுதல் செய்யப்படும்; பாட்டாளிமக்கள் நசுக்கப் படுவார்கள், பண்பாடு நலிந்து, வாழ்வின் தரம் குறைந்து, சமூக விரோத சக்திகள் தலைதூக்கிவிடும் என்றெல்லாம் அவர் அஞ்சினார். தம் மனத்தில் மூண்டெழுந்த இந்த அச்சங்களையெல்லாம் தமது

மாபெரும் நாவலான ரங்கபூமியில் விரிவாகவும், அழுத்தமாகவும் வெளியிட்டிருப்பதையும் காணலாம். முதலாளித்துவப் போக்கும், தொடர்பும்தான் தொழில் வளர்ச்சியை விஷப்பூண்டாக மாற்றி விடுகிறதென்றே, மனிதனின் கடினமான உடலுழைப்பின் வாதனையை யந்திரங்கள் குறைக்கின்றன என்பதையோ அவர் உணர்ந்திருக்கவில்லை.

பிரேம்சந்தின் படைப்புகளில் தேசாவேச உணர்வின் செல்வாக்கு மிகுந்திருக்கின்றது. அவரது எழுத்தில் ராஜாராம் மோகன்ராய், விவேகானந்தர், தயானந்தர், காந்தியடிகள், தாகூர், நேரு, பகத்சிங், சந்திரசேகர ஆஜாத், மற்றும் நாட்டிற்கும், மனிதகுல விடுதலைக்கும் போராடிய மாஜினி, கரிபால்டி, கார்ல் மார்க்ஸ், லெனின் போன்றவர்களின் குரல்களின் எதிரொலியை உணரமுடிகிறது.

## 2

வாரணாசியிலிருந்து நான்கு மைல் தொலைவிலுள்ள லாமாகி என்னும் கிராமத்தில் பிரேம்சந்த் 1880 ஆண்டு ஜுலை 31 தேதி பிறந்தார். சாதாரண நிலையிலிருந்த, உயர்ந்த காயஸ்த குலத்தில் அவர் தோன்றினார். ஆறு பீகா நிலத்தை நம்பி ஒரு பெரிய குடும்பமே வாழ்ந்து கொண்டிருந்தது. பிரேம்சந்தின் பாட்டனார் குரு சகாய்லால் கிராமத்தில் கணக்குப் பிள்ளை வேலை பார்த்து வந்தார். பிரேம்சந்தின் தந்தை அஜாய்லால் தபால் இலாக்காவில் மாதம் 25 ரூபாய் சம்பளத்தில் எழுத்தராகப் பணியாற்றினார். பிரேம்சந்தின் தாயின் பெயர் ஆனந்தி தேவி. அழகும், பண்பும், இனிய இயல்பும் கொண்டிருந்த ஆனந்திதேவி ''படே கர் கி பேடி'' (பெரிய இடத்துப் பெண்) என்ற கதையை நினைவூட்டும் படியாக இருந்தாள். இக் கதையில் வரும் கதாநாயகியின் பெயரும் ஆனந்திதேவிதான்.

கிராமியச் சூழலில் பிரேம்சந்த் தம் இளமைப் பருவத்தைக் கழித்தார். விளையாட்டுப் போக்கும், உற்சாகமும் நிறைந்த அவர், வயல்களிலிருந்து யாருக்கும் தெரியாமல் பொருள்களைக் கவர்வதிலும், சுற்றித் திரிவதிலும் மிகுந்த நாட்டம் கொண்டிருந்தார். இனிப்பு அவருக்கு மிகவும் பிரியமானது. அதிலும் வெல்லமென்றால் உயிர். லாமாகியில் அவரது ஆரம்பக் கல்வி துவங்கியது. சிறிதளவு உருதுவும், பாரசீக மொழியும், மௌல்வி ஒருவரிடம் பயின்றார். ஒரு சமயம் ஒரு ரூபாய் களவாடிய குற்றத்திற்காக அவர் கடுமையாகத் தண்டிக்கப் பட்டது எழுத்திலே இடம் பெற்றுள்ளது. 'காசாகி' என்னும் சிறுகதையில் அவரது

இளம் பருவ நினைவுகள் இடம்பெற்றுள்ளன. 'காசாகி' ஒரு தபால்காரன். தபால்களைத் தொலைதூரத்திலிருந்து கிராமத்திற்கு எடுத்து வருவான். சிறுவன் பிரேம்சந்திடம் அவனுக்கு மிகுந்த ஆசை. எப்பொழுது வந்தாலும் சிறுவனுக்கென்று ஏதேனும் எடுத்துவருவான். சிறுகதையில் இத் தபால்காரன் அச்சிறுவனுக்காக மான்குட்டி யொன்றைப் பிடித்து வருகிறான். மான் குட்டியைத் துரத்திக்கொண்டோடியதில், தபால்நிலையம் திரும்ப மிகுந்த காலதாமதமாகிவிடுகிறது. கடமையில் தவறிய குற்றத்திற்காக அவன் வேலையிலிருந்து நீக்கப்படுகிறான். ''காசாகி'' ஓர் உயர்ந்த குணசித்தரப் படைப்பு. சுயாபிமானமும், கௌரவமும் மிகுத்தவன் என்றாலும், இரக்க உணர்வு அவனுள்ளத்திலே பொங்கித் தளும்புகிறது.

பிரேம்சந்த்—என்ற புனைப்பெயரை ஆசிரியர் பிற்காலத்தில் ஏற்றுக்கொண்டார் என்பதை இங்கு கவனிக்கவேண்டும். அவருக்கு இடப்பட்ட பெயர் தன்பத்ராய். சர்க்கார் ஊழியராகப் பணிபுரிந்த காலத்தில், தாம் எழுதத் துவங்கியபோது 'நவாப் ராய்' என்ற புனைப்பெயரை அவர் சூட்டிக்கொண்டார். அவர் வாழ்ந்தவரையில் பலர் அவரை நவாபாக வருணித்தனர். 'சோஜே வதன்' என்ற பெயரில் வெளியான அவரது முதல் கதைத் தொகுதியை அரசாங்கம் பறிமுதல் செய்தமும், அவர் 'நவாப் ராய்' என்ற தமது புனைப் பெயரைத் துறந்துவிட்டார். இதன் பின்னர் எழுதிய படைப்புகள் யாவுமே 'பிரேம்சந்த்' என்ற பெயரில் தான் வெளியாயின.

'சோரி' (திருட்டு) என்ற சிறுகதையில் அவரது இளம் பருவத்து நாட்கள் சித்தரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம் :—

'இளம் பருவமே! உன்னை மறப்பதெப்படி? சிதிலமான மண்வீடு, கோரைப் புல் படுக்கை, வெற்றுடம்பும், வெறுங் காலுமாக, வயல்வெளிகளிலே சுற்றியதும், மாமரங்களில் ஏறியதும் எல்லாம் நினைவில் நிலைத்து நிற்கின்றன. நாட்டுப்புறச் செருப்புகளை அணிந்துகொண்ட போது எனக்கேற்பட்ட மகிழ்ச்சியும், நிறைவும், இன்று உயர்தர ஜோடுகளை அணியும்போதுகூட ஏற்படுவதில்லை. மாங்காய்ச் சாற்றைப் பருகியதிலிருந்த ஆனந்தம் இன்று ரோஜா ரசத்தைப் பருகுவதில் ஏற்படவில்லை. மாங்காய், வேர்க்கடலை, பட்டாணி, இவற்றைக் கொரித்தபோது ஏற்பட்ட மனநிறைவை இன்று திராட்சையும், இனிப்புப் பலகாரங்களும் எனக்களிக்கவில்லை. அந்நாட்கள்தான் எத்தனை இனிமையானவை? சுவையானவை?

'நானும் ஹல்தரும் பக்கத்துக் கிராமத்திலிருந்த ஒரு மௌல்வியிடம் பாடம் கேட்கச் சென்றுகொண்டிருந்தோம். எனக்கு அப்போது 8 வயது. ஹல்தர் (இப்போது அவன்

உயிருடன் இல்லை) என்னைவிட இரண்டு வயது பெரியவன். காலையில் பழைய ரொட்டியைச் சாப்பிட்டுவிட்டு பள்ளிக்குப் புறப் பட்டுவிடுவோம். பகலுணவிற்கு வறுத்த பருப்புகள், தானியங்கள் இப்படி ஏதாவது எடுத்துக் கொள்வோம். வீட்டைவிட்டு கிளம்பி விட்டால் அவ்வளவுதான்—நாங்கள்தான் ராஜா! மௌல்வி சாகப்பிடம் ஆஜர் பட்டியல் ஏதும் கிடையாது. பள்ளிக்கு வராம லிருந்தால் அபராதம் விதிக்கப்படும் பழக்கமும் கிடையாது. எவ்விதமான பயமோ, அச்சமோ கிடையாது. பின் என்ன? காவல் நிலையத்திற்கு எதிரேயுள்ள மைதானத்தில் போலீஸ் காரர்கள் பயிற்சி செய்வதைப் பார்த்துக்கொண்டே நிற்போம். கழைக் கூத்தாடியின் நாட்டியமாடும் கரடியையோ அல்லது குரங்காட்டியின் குரங்கையோ வேடிக்கை பார்த்துக்கொண்டு அவன்பின் தொடர்ந்து சுற்றுவோம். சில சமயம் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று வேடிக்கைப் பார்ப்பதும் உண்டு. ரயில்வே கால அட்டவணையைவிட எங்களுக்குத்தான் ரயில்களைப் பற்றி அதிகம் தெரிந்திருந்தது. நாங்கள் செல்லும் வழியில் நகரத்து லேவாதேவிக்காரனின் புதிய தோட்டத்தில் கிணறு வெட்டிக்கொண்டு இருந்தார்கள். இதுவும் எங்களுக்கு வேடிக்கை யாக இருந்தது. தோட்டாரக் கிழவன் எங்களை அன்போடு வரவேற்பான். அவனோடு போட்டிப் போட்டுக்கொண்டு அவன் செய்யவேண்டிய வேலைகளை நாங்களே செய்ய முற்படுவோம். வாளியில் நீர் இறைத்துச் செடிகளுக்கு ஊற்றுவோம். பாத்தி கட்டுவது, களை எடுப்பது, கத்தரிக் கோலினால் செடி கொடிகளைச் சீராகக் கத்தரித்துவிடுவது போன்ற வேலைகளைச் செய்வோம். இந்த வேலைகளே எங்களுக்கு எத்தனை இன்பமாக இருந்தது? அந்தந் தோட்டக்காரக் கிழவன் நல்ல கெட்டிக்காரன். சிறுவர் களின் மனப்போக்கை நன்கு அறிந்திருந்தான். எங்களிடம் ஏதோ பரிவு காட்டுவது போல் வேலை வாங்கிக் கொள்வான். அவனுக்கு ஒருநாள் பிடிக்கும் வேலையை நாங்கள் ஒரு மணி நேரத்தில் செய்துவிடுவோம்.

'சில சமயம் வாரக்கணக்கில் பள்ளிக்குப் போகமாட்டோம். மௌல்வி நம்பும்படியாக நாங்கள் கதைக்கும் கதைகளைக் கேட்டதுமே, அவரது சீற்றம் தணிந்துவிடும். அன்று எனக் கிருந்த கற்பனைசக்திமட்டும் இன்று இருக்குமானால் யாவரும் பிரமிக்கும்படியாக ஓர் அற்புத நாவலையே உருவாக்கிவிடுவேன். இப்பொழுதெல்லாம் ஓர் கதைக்கு வேண்டிய கருவைத் தேட எத்தனைச் சிரமப்படவேண்டியிருக்கிறது!

'எங்களது மௌல்விசாகப் ஒரு தையல்காரர். கல்வி போதிப்பது அவருக்கு ஒரு பொழுதுபோக்கு. எங்கள் கிராமத்துக் குயவர்கள், குரமிக்களிடம் எங்கள் மௌல்வி சாகப்பின் திறமை

யைப் பற்றி நாங்கள் வானளாவப் புகழ்வோம். ஒருவிதத்தில் பார்க்கப்போனல், நாங்களிருவரும் மௌல்வி சாகப்பின் விளம்பர ஏஜண்டுகளாக இருந்தோம். எங்களின் முயற்சிகளின் விளைவாக அவருக்குத் தைப்பதற்கு ஏதாவது கிடைத்துவிட்டால் எங்களைக் கட்டிப் பிடிக்கமுடியாது. வகுப்புக்கு வராமலிருந்ததற்குச் சரியான காரணங்கள் கிடைக்காவிட்டால் மௌல்வி சாகப்பிற்கு ஏதாவது காணிக்கை எடுத்துச்செல்வதுண்டு. தானியக் கதிர்கள், கரும்பு, சோளம், பார்லி—இப்படி ஏதாவது எடுத்துச்செல்வோம். இக் காணிக்கைகள் அவருடைய கோபத்தை உடனடியாகத் தணித்து விடும் சக்தி பெற்றவையாக இருந்தன. ஆனல் இவை எல்லாம் கிடைக்காத பருவத்தில் நாங்கள் வேறு உபாயங்களைத் தேட வேண்டிவரும்.'

கில்லி தண்டு ஆடுவது, பட்டம் விடுவது இவ்விரண்டும் இளமைநாட்களில் பிரேம்சந்திற்குப் பிடித்தமான விளையாட்டுகள். அவரது சிறந்த சிறுகதையில் தமக்குக் கில்லி தண்டுவில் உள்ள ஈடுபாட்டைப் பின்வருமாறு வெளியிடுகிறுர்—'இந்த விளையாட் டிற்கு ஒரு மைதானமோ, புல்வெளியோ, வலையோ அல்லது வேறு எந்தவிதமான சாதனமோ தேவையில்லை. கிளை ஒன்றை ஒடித்து கில்லியும் தண்டும் சீவிக்கொண்டால், இருவர் ஆனந்தமாக ஆடத் துவங்கலாம்......இளம்பருவ நினைவுகளில் இதுதான் மிக இனிமையானது.'

திருட்டு (சோரி) என்ற கதையில் தம் ஒன்றுவிட்ட அண்ண னுடன் சேர்ந்து வீட்டிலிருந்து ஒரு ரூபாயை எப்படித் திருடினர் என்பதை பிரேம்சந்த் நினைவுபடுத்திக்கொள்கிறுர்:

கை கால் கழுவிக்கொண்டு வீடு திரும்பிய நாங்கள் பயந்து கொண்டே உள்ளே நுழைந்தோம். எங்களை மட்டும் அப்பொழுது சோதித்துப் பார்த்திருந்தால்? கடவுள்தாம் எங்களைக் காப் பாற்றினர். வீட்டில் யாவரும் அவரவர் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்ததால் எங்களிடம் ஒருவரும் பேசவில்லை. நாங்கள் காலை உணவு சாப்பிடவில்லை, மதிய உணவிற்கும் எதுவும் எடுத்துக்கொள்ளவில்லை. புத்தகங்களை கக்கத்தில் இடுக்கிக் கொண்டு பள்ளிக்குப் புறப்பட்டுவிட்டோம். மழைகாலமாதலால் வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. எல்லையற்ற மகிழ்ச்சி யுடன் பள்ளியை நோக்கி விரைந்த நாங்கள் எத்தனையோ மனக் கோட்டைகளை, நூற்றுக்கணக்கான திட்டங்களைப் போடுவதில் மூழ்கியிருந்தோம். இது கிடைத்தற்கரிய வாய்ப்பு' நெடுநாட்கள் வரும்படி இந்த ரூபாயைச் செலவழிக்க எண்ணினேம். அந்தக் காலத்தில் சேர் ஐந்தணவிற்கு அருமையான இனிப்புப் பண்டங்கள் கிடைக்கும். அரை சேர் இனிப்புப் பண்டமே எங்க ளுக்குத் திகட்டிவிடும். ஆனல் அதை வாங்கினல் இந்த ஒரு

ரூபாய் ஒரே நாளில் தீர்ந்துவிடும் என்று நாங்கள் நினைத்தோம். நிறைந்த இன்பத்தைக் குறைந்த செலவில் பெறுவதற்காக நாங்கள், மலிவான ஆனால் வயிற்றை நிரப்பக்கூடிய பண்டங்களை வாங்கிச் சாப்பிடுவதென முடிவு செய்தோம். கொய்யாப்பழத்தின் நினைவு வந்தது. இரண்டு பைசாவிற்கு கொய்யாப்பழங்களை இருவருமாக வாங்கினோம். பண்டங்கள் கொள்ளை மலிவாக விற்ற காலம் அது. பெரிய பெரிய கொய்யாப் பழங்கள் பன்னிரெண்டு, எங்கள் மடியை நிறைத்துவிட்டன. பழக்காரியின் கையில் ஹல்தர் ஒரு ரூபாயை வைத்ததும் அவள் சந்தேகக் கண்களோடு எங்கள் பக்கம் தன் பார்வையைத் திருப்பினாள். 'ஏண்டா பையன்களா? உங்களுக்கெப்படி ரூபாய் கிடைத்தது? திருடினீர்களா?' என வினவினாள். அதிகம் படித்திருக்கவில்லை என்றாலும் இரண்டொரு புத்தகங்களையாவது நாங்கள் படித்திருந்தோம். அதற்குரிய அறிவு தன் செல்வாக்கை எங்களிடம் காட்டத் துவங்கிவிட்டது. நான் சட்டென்று பதில் கூறினேன்—'மௌல்வி சாகப்பிற்குப் பணம் கட்டவேண்டும்; வீட்டில் சில்லரையில்லை; அதனால் சித்தப்பா ஒரு ரூபாய் கொடுத்தார்.'

வெல்லத்தின் மீது தனக்கிருந்த ஆசையை 'ஹோலி' என்ற சிறுகதையில் பிரேம்சந்த் இவ்வாறு வெளியிட்டிருக்கிறார்:

'அம்மா மூன்று மாத காலம் பிறந்தகம் சென்றிருந்தாள். இதற்குள் ஒரு மணங்கு வெல்லத்தை நான் காலி செய்துவிட்டேன். வெல்லம் காய்ச்சும் காலம் அது. தாத்தா நோய் வாய்ப்பட்டிருந்ததால், அம்மாவைப் புறப்பட்டுவரும்படி சொல்லி அனுப்பிவிட்டார். தேர்வு நாட்கள் நெருங்கிக்கொண்டிருந்ததால் நான் அம்மாவுடன் செல்ல முடியவில்லை. புறப்படு முன் அம்மா ஒரு பெரிய மண் பானையில் ஒரு மணங்கு வெல்லத்தைப் போட்டு, வாயைக் களிமண்ணால் இறுகப் பூசி பத்திரப்படுத்தினாள். பானையைத் திறக்கக் கூடாது என்று எனக்குக் கடுமையான உத்தரவு போடப்பட்டது. எனக்கென்று தனியாக ஒரு பாத்திரத்தில் வெல்லத்தை மூடிவைத்திருந்தாள். ஒரு வாரத்திற்குள் இதைத் தீர்த்துவிட்டேன். காலையில் பாலுடன், பின்பு பகல் உணவுடன், பிற்பகலில் வேற்கடலையுடன், இரவு பாலுடன்—என்று இப்படி வெல்லத்தைக் காலி செய்தேன். இது ஒரு சாதாரண அளவுதான். அம்மா கூட இதை ஆட்சேபித்து இருக்க முடியாது. ஆனால் பள்ளியில் இருக்கும்போதே எனக்கு அடிக்கடி தாகம் எடுக்கும். வீட்டிற்கு வந்து தண்ணீர் குடிப்பேன். ஒவ்வொரு முறையும் ஒன்றிரண்டு வெல்லக்கட்டியை வாயில் போட்டுக் கொள்வேன். ஆனால் இதற்கெல்லாம் பட்ஜெட்டில் இடம் ஏது? வெல்லத்தின் மீது எனக்கிருந்த ஆசை, வெறியாக என்னைப் பற்றிக்கொண்டதை நான் உணர்ந்தேன்.'

பிரேம்சந்தின் தாய் சுமார் ஆறு மாத காலம் நோயுற்ற பின்னர் காலமானுள். அச்சமயம் அவர் எட்டாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தார். பிரேம்சந்தின் வாழ்வில், இரண்டு வருடங்கட்கு பின்னர், அவர் தந்தை மறுமணம் செய்து கொண்டதின் விளைவாக ஒரு 'மாற்ருந்தாய்' இடம் பெற்ருள். பிரேம்சந்தின் படைப்புகளில் 'மாற்ருந்தாய்' கதைக்கருவாக பல இடங்களில் வருவதிலிருந்து, தாயின் மரணத்திஞல் அவரது வாழ்வில் ஏற்பட்ட சூனியத்தை மாற்ருந்தாயிஞல் நிரப்ப முடிய வில்லை என்பதை நாம் தெள்ளத் தெளிய உணரலாம்.

பிரேம்சந்திற்கு, இச் சமயத்தில்தான் நாவல்களைப் படிப்பதில் மிகுந்த ஆசையும், விருப்பமும் உண்டாயிற்று. ஒரு புகையிலைக் கடையில் கதைக் களஞ்சியமான 'திலிஸ்ம ஹோஷ்ருபா'வின் முடிவில்லாத தொடர்கதைகளைக் கேட்கலாஞர். இப் புனைக் கதைகளின் ஆசிரியரான பைஜி, அக்பரை மகிழ்விப்பதற்காகப் பாரசீக மொழியில் இதை எழுதிஞர் எனக் கூறப்படுகிறது. கற்பனையைத் தூண்டும் இக் கதைகளைக் கிட்டத்தட்ட ஓராண்டு காலம் பிரேம்சந்த் கேட்டுவந்தார்.

அவர் படித்த நூல்களில் ரத்னநாத் சர்ஷாரின் நூல்கள், ரெயினுல்ட்சின் 'லண்டன் மாநகர தர்பாரின் மர்மங்கள்' போன்ற நூல்களும் இடம்பெற்றிருந்தன. கோரக்பூரிலிருந்தபோது பிரேம் சந்த் புத்தகவியாபாரியான புத்திலால் என்பவரின் நண்பராஞர். பள்ளிப் புத்தகங்களுக்காக எழுதப்படும் நோட்ஸ்களை அவருக்காக விற்றுத்தந்து, அதற்கு பதிலாக கடையிலிருந்த புத்தகங்களை வீட்டிற்கு எடுத்துச் சென்று படிக்கும் சலுகை அவருக்குக் கிடைத்திருந்தது. நூற்றுக்கணக்கான நூல்களை அந்த இரண்டு மூன்று வருடங்களுக்குள் அவர் படித்திருப்பார்.

கோரக்பூரிலிருந்த சமயத்தில்தான் பிரேம்சந்த் தமது முதல் இலக்கியப் படைப்பை உருவாக்கிஞர். பிரேம்சந்தின் பிரம்மச் சாரியான மாமா ஒருவர் துரதிருஷ்டவசமாக கீழ்ச்சாதிப் பெண் ணுடன் தொடர்பு பூண்டிருந்தார். இதைப் பற்றிய கேலிச் சித்திரம் இது. பிரேம்சந்தின் நாவல் படிக்கும் பழக்கத்தை இந்த மாமா கண்டிப்பது வழக்கம். இதற்குப் பழி தீர்த்துக்கொள்வது போல் மாமாவின் காதலை நாடகமாகத் தீட்டிவிட்டார் பிரேம்சந்த். முதற் படைப்பான இந்நூல் நமக்குக் கிடைக்கவில்லை—சீற்ற மடைந்த மாமா அதை தீக்கு இரையாக்கி இருக்கலாம்.

## 3

பிரேம்சந்த் தமது வாழ்க்கையைச் 'சீரான சமவெளி' என்று கூறியுள்ளார். அவரது வாழ்க்கையில் பிரமிக்கத் தக்க நிகழ்ச்சி

களோ, எதிர்பாராத சம்பவங்களோ இல்லை. வேலையில் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றலானது, நூல்கள் வெளியான குறிப்புகள்—இவைதாம் இதில் அடங்கும். நண்பரொருவருக்குத் தமது வாழ்க்கையைப் பற்றி பிரேம்சந்த் இவ்வாறு எழுதுகிறார் :—

'சம்வத் ஆண்டு 1937இல் பிறந்தேன். என் தந்தையின் பெயர் முன்ஷி அஜாய்லால். வாரணாசி ஜில்லா, பாண்டேபுர் தாலுக்கா, மௌஜா மார்வானில், லாமாகி எனது கிராமம். முதல் எட்டு ஆண்டுகள் பாரசீக மொழிப் பயிற்சி. பின்னர் ஆங்கிலப் படிப்பு. வாரணாசியில் ஓர் பள்ளியில் (என்ட்ரன்ஸ்) புதுமுக வகுப்பில் தேர்ச்சி பெற்றேன். பதினைந்து வயதில் தந்தை மரணமடைந்தார். எனக்கு ஏழு வயதாக இருக்கும்போதே தாய் இறந்துவிட்டாள். கல்வி இலாக்காவில் ஆசிரியராகச் சேர்ந்தேன். 1901-இல் எனது இலக்கிய வாழ்வு துவங்கியது.'

மற்றொரு இடத்தில் தமது வாழ்க்கையைப் பற்றி சுருக்கமாக சுயவிமர்சனம் செய்கிறார்—'எனது வாழ்க்கை சீரான சமவெளி போன்றது. பள்ளங்களை வேண்டுமானால் எப்பொழுதாவது காணமுடியும். ஆனால் குன்றுகளையோ, மலைகளையோ, அடர்ந்து செறிந்த காடுகளையோ, ஆழ்ந்த பள்ளத்தாக்குகளையோ, இடிபாடுகளையோ இதில் காணமுடியாது. குன்றுகள், மலைகளிடையே உலாவ விரும்பும் கனவான்கள் பெரிதும் ஏமாற்றத்திற்குள்ளாவார்கள்.'

பதினைந்தாவது வயதில் பிரேம்சந்த் ஒன்பதாம் வகுப்பில் மாதம் ஐந்து ரூபாய் செலவு செய்துகொண்டு வாரணாசியிலிருந்த ராணி கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தார். அதிகாலையில் ஒரு பொட்டலத்தில் கடலையும், வெல்லமும் எடுத்துக்கொண்டு கிராமத்திலிருந்து புறப்பட்டால், பள்ளியில் நாள் முழுவதும் படித்துவிட்டு, வீடு திரும்பும்போது பொழுது சாய்ந்துவிடும். இரவிலே எண்ணெய் விளக்கொன்றை ஏற்றி வைத்துக்கொண்டு படிப்பார்.

அவரது மாற்றாந்தாயின் தந்தையின் ஏற்பாட்டின்படி, பதினைந்தாம் வயதில் பிரேம்சந்தின் திருமணம் நடந்தது. கிடைத்த தகவல்களின்படி இப் பெண் இங்கிதம் அறியாதவளாகவும், அழகற்றவளாகவும் இருந்ததாகத் தெரிகின்றது. சச்சரவிடும் இயல்புடையவளாகவும் இருந்ததால் துவக்கத்திலேயே இல்லற இன்பம் தகர்ந்து, சிதறி, சிதைந்து, பாழாகிவிட்டது.

பிரேம்சந்தின் தந்தை நீண்டகால நோய்க்குப்பின் 1897-இல் காலமானார். மெட்ரிக் தேர்வு நெருங்கிக்கொண்டிருந்தது. பிரேம்சந்த் மிகவும் சிரமமான நிலையில் இருந்தார். வாரணாசியில்

ஒரு சிறுவனுக்குப் பாடம் கற்றுத்தரத் துவங்கினர். பள்ளி முடிந்த பின், அச் சிறுவனுக்கு மாலே ஆறுமணி வரை பாடம் சொல்லித் தருவார். இதன்பின் கால்நடையாக கிராமத்தை அடையும் போது மணி 8 அடித்துவிடும். இத்தகைய சிரமங்களுக்கிடையே அவர் மெட்ரிக்கில் இரண்டாம் வகுப்பில் தேர்வுபெற்ருர். ராணி கல்லூரியின் விதிமுறைகளின்படி முதல் வகுப்பில் தேறும் மாணவனுக்குத் தான் இலவச சம்பளச் சலுகை வழங்கப்படும். இதனுல் பிரேம்சந்த் சென்ட்ரல் இந்து கல்லூரியில் சேர முயற்சித்தார். ஆனல் இங்கும் கணிதம் அவருக்குப் பெரும் தடையாக நின்றது. அதிர்ஷ்டவசமாக ஒரு வக்கீலின் மகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் வேலே கிடைத்தது. இதைப் பற்றி அவர் எழுதுகிருர்:

'மாதம் ஐந்து ரூபாய் சம்பளம். என் செலவிற்கு இரண்டு ரூபாய் எடுத்துக்கொண்டு மீதமிருந்ததை வீட்டிற்கு அனுப்புவதாக முடிவு செய்தேன். வக்கீலின் வீட்டில் குதிரை லாயத்தின் மேலே, காரை பூசாத ஒரு சிறிய அறை இருந்தது. இதில் தங்க முதலில் அனுமதி பெற்றேன். தரையின் மீது கோணிப்பைகளே விரித்துவிட்டேன், கடையிலிருந்து ஒரு விளக்கை வாங்கி வந்தேன். இப்படியாக எனது நகர வாழ்க்கை துவங்கியது. வீட்டிலிருந்து இரண்டொரு பாத்திரங்கள், பானேகள் கொண்டு வந்தேன். காலேயில் 'கிச்சடி' ஏதாவது சமைத்துக் கொள்வேன். பாத்திரங்களேச் சுத்தம் செய்துவிட்டு, வாசகசாலேக்குப் போய் விடுவேன். கணிதம் படிக்கச் செல்லுவதாக பாவனே—ஆனல் நான் படித்ததெல்லாம் நாவல்கள்.'

இந்த ரீதியில் நடைபெற்ற வாழ்க்கையில் பிரேம்சந்த் கடனளியானர். புத்தகக் கடையொன்றில் தம் புத்தகமொன்றை ஒரு ரூபாய்க்கு விற்ருர். இங்குதான் அவர் சூனர் மிஷன் பள்ளியின் தலேமை ஆசிரியரைச் சந்தித்தார். தமது பள்ளிக்கு ஓர் ஆசிரியரைத் தேடிக்கொண்டிருந்த அத் தலேமை ஆசிரியர் பிரேம்சந்திற்கு மாதம் 18 ரூபாய் சம்பளத்தில் ஆசிரியர் வேலேயை அளித்தார். இது நடைபெற்ற வருடம் 1899.

பிரேம்சந்தின் நீண்டகால ஆசிரிய வாழ்க்கை இவ்விதமாகத் துவங்கியது. சூனரில் அவர் அதிக நாட்கள் இருக்கவில்லே. 1900-இல் பஹ்ராய்ச்சில் அரசினர் பள்ளியில் உதவி ஆசிரியராகச் சேர்ந்தார். அரசாங்க ஊழியம். மாதம் இருபது ரூபாய் சம்பளம். இரண்டொரு மாதங்கட்குப் பின்னர் அவர் பிரதாப்கட்டிற்கு மாற்றப்பட்டார். இங்கிருந்து ஆசிரியர் பயிற்சி பெற அலகாபாத்திற்கு அனுப்பப்பட்டார். பயிற்சிக்குப்பின் அலகாபாத்தின் மாடல் பள்ளியில் தலேமையாசிரியரானர். விரைவிலேயே கான்பூர் அரசினர் பள்ளிக்கு மாற்றலாகியது. பிரேம்சந்த் இலக்கியத்

துறையில் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்த காலமும் இதுதான். கான்பூரில் இருந்தபொழுதுதான் 'ஜமானு'வின் ஆசிரியர் முன்ஷி தயாதநாராயண் நிகம் அவரது நெருங்கிய நண்பரானுர்.

வாரணுசியிலிருந்து வெளியான 'ஆவாஜேகல்க்' என்னும் உருது வாரப் பத்திரிகையில் பிரேம்சந்தின் முதல் நாவலான 'அஸ்ராரே மாபித்' 1903 அக்டோபர் முதல் 1905 பிப்ரவரி வரை தொடராக வெளிவந்தது. பூசாரிகள், மடாதிபதிகளின் அட்டூழி யங்கள் இந் நாவலில் மிகையாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. யசோதாநந்தன் கோவில் பூசாரி. இழிவான குணம் படைத்த அவன் நடத்தை கெட்டவன். ஆலயத்திற்கு வரும் பெண்களிடம் தகாத முறையில் நடந்து, அவர்களின் கற்புக்கு உலை வைக்கிறுன். பூசாரி யசோதாநந்தன், வேசி பீபீஜான், பூசாரியினுல் வஞ்சிக்கப் பட்ட இளம் பெண் ராம்கலி, ஆகியவர்கள் இந்நாவலின் முக்கியக் கதாபாத்திரங்கள். நாவலில் கட்டுக்கோப்பு இல்லை. மிகைப் படுத்தப்பட்ட வருணனைகள் அதிகம் காணப்படுகின்றன. உள்ளதை உள்ளபடி எடுத்துக் காட்டுவதாக இல்லை.

வாழ்வின் ஓர் அம்சத்தை மிகைப்படுத்திக் காட்டுவதுடன் நில்லாமல் வரம்பு மீறி திரித்தும் காட்டப்பட்டுள்ளது. உண்மை இதைவிடச் சாரமற்றது. இதை வாழ்வின் தத்ரூபமான சித்திரம் எனச் சொல்வதற்கில்லை. வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டும் ஆர்வத்தைவிட கிண்டலும் பரிகாசமும் செய்யும் ஆர்வம்தான் இந் நாவலில் மேலிட்டுக் கிடக்கிறது. நல்லது, கெட்டது என்ற இரு தன்மைகளைப் பிரதிபலிக்கக் கூடியதாகப் பாத்திரப் படைப்பு அமைந்திருக்கிறது. எல்லோராலும் ஏமாற்றப்பட்டு, முட்டா ளாக்கப்படுகின்ற ராம்கலியின் கணவன் ஒருவன்தான் இந் நாவலில் வரும் ஒரே ஒரு நேர்மையான பாத்திரம். துலாரி பண்பும் நேர்மையும் கொண்டவள். ராம்கலியின் பசப்பு வார்த்தை களில் மயங்கி விழாமலிருக்கும் இவளது பாத்திரம் இந்நாவலில் அழுத்தமாகச் சித்திரிக்கப்படவில்லை. ஆசிரியரின் முதல் படைப் பான இது ஓர் அரைகுறையான சித்திரம். இந்நாவலில் முதிர்ச்சியைக் காண இயலவில்லை. இளமையின் துடிப்பும் வேகமும் இருக்கின்றன. வாழ்க்கையை ஒரே மப்பும் மந்தாரமு மான நிலையில் காணுமல் உள்ளது உள்ளபடி காண விழையும் ஆர்வத்தையும் அதனுடன் பின்னிப் பிணைந்த வேகத்தையும் காணமுடிகிறது.

பிரேம்சந்தின் அடுத்த நாவலாகிய 'ஹம் குர்மாவோ ஹம் சவாப்'—1907-இல் அலகாபாத் இந்தியன் பிரஸ்ஸிலிருந்து 'பிரேமா' என்ற பெயரில் இந்தியில் வெளியாகியது. 'இரு தோழி களின் விவாதம்' என்ற உபதலைப்பும் கொடுக்கப்பட்டிருந்த இந் நாவலின் விலை 10 அணு. ஆசிரியரின் பெயர் 'பாபு நவாப் ராய்'

என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. முந்திய படைப்பைவிட இதில் முதிர்ச்சியைக் காணமுடிகின்றது. இந்நாவலின் கதாநாயகனை அமிருதராய் தனக்கு நிச்சயிக்கப்பட்டிருந்த அழகிய பணக்காரப் பெண்ணான பிரேமாவைத் துறந்துவிட்டு இளம் விதவையான பூரணாவை மணக்கின்றான்—சமூக சீர்திருத்தத்தைத் தடுக்கும் சக்திகளைத் துணிவுடன் எதிர்த்துநின்று வெற்றி காண்கின்றான். பழமைக் கருத்துகள் என்ற போர்வையில் ஒளிந்துகொள்ளும் சமூக அநீதிகளை எதிர்த்து பிரேம்சந்த் நடத்திய இலக்கியப் போராட்டமாக இந் நாவல் அமைந்துள்ளது.

அவரது மகத்தான எதிர்காலத்திற்கான பல கருத்தம்சங்களை தன்னகத்தே கொண்டிருந்தாலும் இந்நாவலின் கட்டுக்கோப்பில் தளர்வு காணப்படுகின்றது. ஆனால் முதிர்ச்சியும் இலக்கியத் தன்மையும் பெறாத கன்னி முயற்சியாக இது இருக்கிறது. பாத்திரப்படைப்பு மிக சாதாரணமானது. பாத்திரங்களை நன்மையும், தீமையும், குறைவும், நிறைவும் ஒருங்கே பெற்றவர்களாகக் காட்டாது, நன்மை தீமை என்ற இரு தன்மைகளைத் தனித்தனியே பிரதிபலிப்பவர்களாகக் காட்டி இருக்கின்றார்.

துவக்க காலத்தில் அவர் எழுதிய இன்னொரு நாவலான 'கிருஷ்ணா'வை பற்றி 1907-இல் விளம்பரப்படுத்தப்பட்டு அதே ஆண்டு அது 'ஜமானாவில்' வெளியிடப்பட்டது. சுமார் 142 பக்கங்கள் கொண்ட இந் நாவலின் ஒரு பிரதிகூடத் தற்சமயம் கிடைக்கவில்லை. பெண்களின் நகை ஆசையை பரிகசித்த இந் நாவல் அவர் பிற்காலத்தில் எழுதிய 'கபன்' (கையாடுதல்) என்ற நாவலின் முன்னோடியாக விளங்கியது.

பிரேம்சந்த் கான்பூரில் மிக்க மகிழ்ச்சியோடு இருந்தார். 'ஜமானா' பத்திரிகையின் அலுவலகத்தில் இலக்கியச் சூழலை அவர் நன்கு ரசித்தார். முன்ஷி தயாநாராயண் நிகமுடன் அவர் கொண்டிருந்த நட்பு, விரைவில் நெருக்கமானதொரு அந்தரங்க நட்பாக வளர்ந்துவிட்டது. கோடை விடுமுறைக்கு லாமாகி சென்ற பிரேம்சந்த் கான்பூரின் இலக்கிய சூழலின் பிரிவைப் பெரிதும் உணர்ந்தார். லாமாகியின் கோடை வெப்பத்தின் கடுமையை வர்ணித்து எழுதுவது எத்தனைச் சிரமமாக இருக்கிறது என்பதை நிகமுக்கு அவர் எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்—'வெயில் தாங்கமுடியவில்லை. எனக்கொரு வீடு இருக்கிறதென்று சொல்லிக்கொள்ளலாம், உண்மையைச் சொன்னால் இந்தக் கிராமம் முழுவதும் பொறாமைப்படுகின்ற இந்த வீட்டில், வசதியாக வாழ ஒரு அறைகூட இல்லை. மேல்மாடியில் அனல்வாரிக் கொட்டுகிறது. மேலேறிச் சென்றதுமே தலையிலிருந்துக் கால்வரை, வியர்வை வெள்ளமாகப் பெருகத் துவங்கி

விடுகிறது. கீழேயுள்ள அறைகளிலெல்லாம் குப்பைக்கூளம் நிறைந்து கிடக்கின்றது. ஓர் அறையில் மாடுகள். இன்னொரு அறையில் வரட்டி. தானியக் குவியல் ஒருபுறம். கல் திரிகை, உலக்கை, உரல் இப்படி ஏதேதோ நிறைந்து கிடக்கின்றன. காலை நீட்டி படுக்கக்கூட இடமில்லை. வேறுவழியின்றித் தானியம் சேமிக்கும் அறையில் கட்டிலைப் போட்டுக்கொண்டு படுத்துக் கிடக்கிறேன். தன்னந்தனியாக வெளியே உலாவச் செல்வ தற்கும் பிடிக்கவில்லை. குழந்தைகள் சில நாட்கள் இங்கு வந்திருக் கிறார்கள். பின்னர் என் மனைவியுடன் வஸ்திக்குச் சென்று விடுவார்கள். இந்த வெயிலில் படிப்பதோ எழுதுவதோ இயலாத காரியம். காலை வேளையில் புத்தகத்தில் சில பக்கங்களைப் புரட்டு கிறேன். மற்றபடி நாள் முழுவதும் இந்தக் கட்டில்தான் என் புகலிடம். சாதாரணமாகவே நான் நன்றாக உறங்குபவன். ஆனால் இந்த உறக்கம் கூட என் சொற்படிக் கேட்கமாட்டே னென்கிறது. எத்தனை எத்தனையோ பிரச்சினைகள்; சிரமங்கள்! கான்பூரில் வாழ்க்கை எத்தனை மகிழ்ச்சியாக, சிரிப்பும் களிப்பு மாகக் கழிந்தது! இங்கு நான் செவிடனாய் ஊமையாய் இருந்து கொண்டிருக்கிறேன். வாழ்க்கை ஒரு சுமையாகக் கனக்கிறது. இந்த விடுமுறை சீக்கிரமாகக் கழியவேண்டும்—மீண்டும் நண்பர் களெல்லாம் கூடி அந்த ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றேன். நான் இங்கு வந்து இருபது நாட்கள் கழிந்துவிட்டன. இன்னும் என் வாயிலிருந்து......எனக்குப் பிரிய மான 'பாம்பூக்' என்ற சொல் ஒரு தடவைகூட வெளிவரவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!'

பிரேம்சந்தின் முதல் திருமணம் முழுத் தோல்வியாக அமைந்துவிட்டது. இக் கோடை விடுமுறையின் போதுதான் அவள் தற்கொலை செய்துகொள்ள முயன்றாள். நிகமுக்கு எழுதிய கடிதத்தில் பிரேம்சந்த் இதைக் குறிப்பிட்டிருக்கிறார் :

'சகோதரா! எனது துயரத்தை யாரிடம் சொல்லிக் கொள்வேன்! என்னால் இத் துன்பச் சுமையைத் தனியாகத் தாங்க முடியவில்லை. மிகுந்த சிரமத்துடன் பதினைந்து நாட்களைக் கழித் திருப்பேன். இதற்குள் குடும்பப் பூசல்கள் சங்கிலித் தொடராகக் கிளம்பிவிட்டன. பெண்கள் ஒருவரை ஒருவர் வசைபாடத் தொடங்கிவிட்டனர். கோபத்தில் என் மனைவி தூக்குப் போட்டுக் கொண்டுவிட்டாள். சித்திக்கு ஏதோ சந்தேகம் தட்டவே நள்ளிரவில் எழுந்து வந்து பார்த்து, அவளை விடுவித்திருக்கிறாள். காலையில்தான் எனக்கு எல்லாம் தெரிந்தது. எனக்குக் கோபம் வந்துவிடவே அவளைக் கடுமையாகக் கண்டித்துவிட்டேன். தன்னைப் பிறந்தகத்தில் கொண்டுபோய் விடும்படி அவள் கூறி விட்டாள். இனி இங்கு வாழமுடியாது என மறுத்துக் கூறி

விட்டாள். என்னிடமோ சல்லிக்காசு கூட இல்லை. வயலிலிருந்து முன்பணமாக ஏதோ திரட்டி அவள் புறப்பட ஏற்பாடு செய்தேன். அழுது புலம்பிவிட்டு அவள் சென்றிருக்கிறாள். அவளைப் பிறந்தகத்தில் கொண்டுபோய் விட நான் போகவில்லை. அவள் சென்று எட்டு நாட்களாகின்றன. இதுவரை ஒரு கடிதமோ, தகவலோ எதுவும் இல்லை. முன்னரே அவளால் எனக்கு மகிழ்ச்சி ஏதும் ஏற்பட்டு இருக்கவில்லை. இனி அவள் முகத்தைப் பார்க்கக்கூட நான் விரும்பவில்லை. ஒருக்கால் இது நிரந்தரமான பிரிவாகவே இருக்கலாம். அப்படியே இருக்கட்டும். மனைவி இல்லாதவனாகவே நான் இருந்துகொள்கிறேன்.'

பிரேம்சந்தின் முதல் திருமணத்தைப்பற்றியும், அவரது முதல் மனைவியைப் பற்றியும் அதிகமான விவரங்கள் கிடைக்காமல் இருப்பது வியப்பைத் தருகிறது. பிரேம்சந்தும் இதுபற்றி அதிகம் கூறவில்லை. மற்றவர்களும் மௌனமாக இருந்துவிட்டனர். இந்த விஷயம் முழுவதுமே ஆழ்ந்த மர்மத்தில் புதைந்து கிடக்கின்றது. சச்சரவிடும் சுபாவமுடைய அவளது முதல் மனைவி, பார்க்க நன்றாக இருக்கவில்லை. இந்தியாவில் திருமணமுறிவுக்கு இக்காரணங்கள் போதுமானவை எனக் கூறமுடியாது. பிரேம்சந்தும் பொறுமை அற்றவர் அல்ல. சகிப்புத் தன்மை மிக்க அவர், வாழ்வில் நிறையச் சிரமப்பட்டிருக்கிறார். கிடைத்த விபரங்களின் படி இரண்டாவது திருமணத்தின் பின்னும் அவரது இயல்பு அப்படியேதான் இருந்திருக்கின்றது. நல்லவேளையாக அவரது இரண்டாவது திருமணம் மகிழ்ச்சிகரமாக அமைந்துவிட்டது. முதல் மனைவி என்ன ஆனாள் என்பது பற்றிச் சரியாகத் தெரியவில்லை. பிரேம்சந்தின் இரண்டாவது திருமணத்திற்குப் பின் அவள் பல வருடங்கள் உயிரோடு இருந்திருக்கின்றாள். அவளை மீண்டும் அழைத்து வருவது பற்றி சில சமயத்தில் விவாதிக்கப்பட்டிருக்கின்றது. பிரேம்சந்தின் இரண்டாவது மனைவியான சிவராணி தேவி, தான் அவளை அழைத்துவர விரும்பியதாகவும், ஆனால் பிரேம்சந்த் மறுத்துவிட்டதாகவும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

## 4

பிரேம்சந்த் நல்ல நிறம். உயரம். வனப்பான தோற்றம் கொண்டவர். செம்பட்டை நிறமான அடர்த்தியான மீசை. பகட்டில்லாத, எளிமை நிறைந்தவராக அவர் இருந்தபோதிலும் தலைப்பாகை அணிந்துகொண்டால் ஓர் இளவரசனைப் போலிருப்பார். முதன்முதலாக அவரைச் சந்தித்தவர்கள் இவரா

பிரேம்சந்த் என வியந்தனர். அவரிடமே வந்து பிரேம்சந்த் எங்கே இருக்கிறர் எனக் கேட்டதுண்டு. கம்பீரமும், மிடுக்கும் நிறைந்த ஒருவரை எதிர்பார்த்த அவர்கள் பகட்டின் மேல் பூச்சில்லாத எளிமை நிறைந்த ஒருவரை எதிர்பார்க்க வில்லை. எழுத்தாளர் என்ற முறையில் தாகுரை முன்மாதிரியாகக் கொண்டிருந்தவர்கள் பிரேம்சந்தை முதன் முறையாகச் சந்தித்த போது ஏமாற்றம் அடைந்தனர். எனினும் நாளடைவில் அவரது நல்ல தன்மையும், நேர்மையும், எளிமையும், வாழ்க்கையைப் பற்றிய அவரது யதார்த்தமானக் கண்ணேட்டமும், மனம் கனிந்த சிரிப்பும் அவர்களை அவர்பால் கவர்ந்தது. மாபெரும் மனிதனைக் காண அவாக்கொண்டு அவர்கள் கற்பனை செய்திருந்த காம்பீர் யமும், காண்போரை வசீகரிக்கும் தன்மையும் பிரேம்சந்திடம் காணப்படவில்லை. எளிய மகனுய், தோற்றத்திலும் எண்ணத் திலும் நிலமடந்தையின் புதல்வனுய், ஓர் உண்மைக் குடியான வனுய் அவர் திகழ்ந்தார்.

பிரேம்சந்தைத் தெரிந்துகொள்வது என்பது அவரை நேசிப் பதாகும். பழமைவாதிகளும், வைதிகப்பற்று மிக்கவர்களும் அவரை வெறுத்தனர். தமது நோக்கிலும், போக்கிலும் அவர் இனப்பற்றுக் கொண்டவராக இருக்கவில்லை. சிந்தனையிலே அவர் முற்போக்குவாதியாகத் திகழ்ந்தார். தம் எழுத்தின் மூலமாக மூடநம்பிக்கையைக் கண்டிக்க அவர் சற்றும் தயங்கவில்லை. மனம் திறந்து சிரிக்கும் அவரது சிரிப்பு, அற்புதமானது. தூண்டி விடப்பட்டால் அப்படியே அலை அலையாகப் பொங்கிப் பெருக் கெடுக்கும். அவரது இரு பிள்ளைகளும் தந்தையிடமிருந்து இச் சிரிப்பைப் பெற்றிருக்கின்றனர்.

பிரேம்சந்தின் முதல் மனைவி அறிவாற்றலிலும், தோற்றத் திலும் அவருக்கு ஏற்றவள் அல்ல. இத் திருமணம் முறிந்து விட்டது. பிரேம்சந்தின் மனைவியைப் பொறுத்தவரை இது ஒரு துயரமான நிகழ்ச்சியாகத் தீராத சாபமாக இருந்திருக்கலாம். திருமணத்தை ஒரு சூதாட்டமாக்க முற்பட்டிருக்கும் இந்திய நாட்டுத் திருமண முறையைத் தான் இதற்குக் குறை கூற வேண்டும். இங்குத் திருமணங்கள் பெரும்பாலும் வேண்டிய வர்கள், தெரிந்தவர்கள் மூலமாகத்தான் நிச்சயிக்கப்படுகின்றன. இளம் தலைமுறையினரின் இன்பத்தைவிட, இவர்களுக்குத் தங்கள் சுயலாபத்தில்தான் அதிக நாட்டம், சரத்சந்திரரின் நாவல் ஒன்றில் சாகப்போகும் கிழட்டுப் பிராமணன் ஒருவன், பெண்ணைப் பெற்றவர்களுக்குச் சுவர்க்கத்தில் இடம் தேடிக் கொள்ளும் வாய்ப்பை அளிப்பதற்காக வேண்டி பல பெண்களைத் திருமணம் செய்துகொள்ளுகிறன். வருடத்திற்கொருமுறை ஒவ்வொரு மாமனர் வீடாகச் சென்று நிறைய பணம்,காசு, சீர் வகைகளோடு

தன் வீடு திரும்புகிறுன். இம்மாதிரிப் பிரயாணங்களை மேற்கொள்ள இயலாதபடி முதுமை வந்துவிடுகிறது. இருப்பினும் பேராசைக்காரஞன அக் கிழவன் தனக்குச் சேரவேண்டிய சீர் வரிசைகளை வசூல் செய்துவரத் தாழ்ந்த குலத்தைச் சார்ந்த வேலைக்காரனெருவனை அனுப்புகிருன். திகைப்பூட்டும் இத்தகைய தொழில்கள், பழமைவாதிகள் நிறைந்த இப் புனித மண்ணில்தான் வளரமுடியும்.

இரண்டாம் முறையாகத் திருமணம் செய்துகொள்ளும் எண்ணம் ஏற்பட்டதும் பிரேம்சந்த், இம்முறை ஒரு விதவையைத் தான் மணமுடிப்பது என நிச்சயித்தார். அவரது உயரிய லட்சியங்களுக்கும், சீரிய எண்ணங்களுக்கும் இம்முடிவு ஏற்றதாக இருந்தது. சிவராணிதேவி கன்னி விதவை. துணிச்சல்காரரான அவரது தந்தை, பதேபூருக்கு அருகில் ஒரு நிலச்சுவான்தாராக இருந்தார். அவர் தம் மகளுக்கு மறுமணம் செய்விக்க ஆவலோடு இருந்தார். பிரேம்சந்தின் இவ்விரண்டாவது திருமணம் நடைபெற்ற 1906-ஆம் ஆண்டில் மிக மிகத் துணிகரமான செயல் இது.

'வீட்டில் பிரேம்சந்த்' என சிவராணிதேவி எழுதியிருக்கும் நூலில் அவரது குடும்ப வாழ்வு மிக விரிவாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. பிரேம்சந்த் தமது தந்தையைப் போல் சீதபேதிக்கு ஆளாகி, வயிற்றுக் கோளாறுகளிஞல் இடைவிடாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார் எனவும் தெரிகிறது. மனித இயல்பிலே நம்பிக்கைக் கொண்டிருந்த அவர் ஒரு எளிமையான இலட்சிவாதி. மனிதர்களிடம் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார் பிரேம்சந்த். அவரது இக் குணம் தகாத முறையில் பிறரால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டிருக்கிறது. அவர் சிறு சிறு தொகைகளைப் பலருக்குக் கடஞக அளித்திருக்கிருர். அவையெல்லாம் திரும்பி வந்ததே இல்லை. இவ்வுலகில் வாழும் முறையை நன்கு அறிந்தவர் சிவராணிதேவி. பிரேம்சந்திஞல் தாக்குப்பிடிக்க முடியாத இத் தாராள மனப்பான்மைக்காக அவரது மனைவி, அவரைப் பலமுறை கடிந்துகொண்டதுண்டு. 'தர்போர்சங்'கில் ஒரு போலி இலக்கியவாதி எவ்வாறு தம்மை ஏமாற்றிப் பணம் பறித்தான் என்பதைப் பிரேம்சந்த் விவரித்துள்ளார். தமது தம்பியான (சிற்றன்னையின் மகன்) மகதாப் ராய்க்காக அவர் ஓர் அச்சகத்தை வாங்க நினைத்தார். ஆஞல் சிவராணி தேவி, அச்சகம் தம் மூத்த மகஞன ஸ்ரீபத்ராயின் பெயரில் வாங்கப்படவேண்டும் என விரும்பிஞர். இது சகோதரர்களிடையே கடுமையான மனத்தாங்கலை ஏற்படுத்தியது. கிடைத்துள்ள விவரங்களின்படி, குடும்பத்தின் பொறுப்பும், அதிகாரமும் சிவராணி தேவியிடம் தானிருந்தது எனத் தெரிகிறது.

பிரேம்சந்த் கான்பூரில் 1905 மேயிலிருந்து 1909 ஜுன் வரை தங்கியிருந்தார். இச்சமயம் அவர் அரசியலில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார். 'ஜமானு'வில் அடிக்கடி எழுதலானார். துவக்கத்தில் கோகலேயின் சீடராக இருந்த அவர் விரைவில் திலகரின் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டார். தயா நாராயண் நிகம் மிதவாதப் போக்குடையவர். ஆனால் பிரேம்சந்த் தீவிரவாதி. இருப்பினும் இருவருக்குமிடையே அந்தரங்கமான நட்பு இருந்தது. பிரேம் சந்தின் கருத்துக்களைப் பற்றி நிகம் பின்வருமாறு எழுதுகிறார்:—

'அரசியல் போராட்டத்தில் பிரேம்சந்த் தீவிரவாதிகளைச் சார்ந்து நின்றார். நாங்களிருவரும் ஒன்றாக அகமதாபாத் காங்கிரஸிற்குச் சென்றோம்—ஒரே இடத்தில் தங்கினோம். நான் பிரோஸ்ஷா மேத்தாவையும், கோகலேயையும் ஆதரித்தேன்; அவர் திலகரை ஆதரித்தார். எங்களுக்குள் எப்பொழுதும் கடும் விவாதம் நடக்கும். ஆனால் அவரவர் எண்ணத்தில் உறுதியாக நிற்போம். சில்லரை சீர்திருத்தங்களில் பயனில்லை என்று பிரேம்சந்த் கருதினார். மிண்டோ-மார்லே ஒப்பந்தம், மாண்டேகு-செம்ஸ்போர்டு திட்டங்களில் அவருக்கு நம்பிக்கை இல்லை.'

பிரேம்சந்தின் போக்கைப் பற்றி நிகம் எழுதுகிறார்:

'மாபெரும் போராட்டத்தில், உடன்படிக்கை என்பதை அவர் சந்தேகக் கண் கொண்டுதான் பார்த்தார். தீவிரப் போராட்டத்தாலன்றி, எதையும் சாதிக்க முடியாது என்று அவர் எண்ணினார். எத்தனை விரைவாக முடியுமோ, அத்தனை விரைவாக மக்களை இத்தகைய போராட்டத்திற்குத் தயார் செய்யவேண்டும். அரசாங்கத்துடன் கடுமையான மோதல் ஏற்பட்டாலன்றி எதுவும் நடக்காது என்பது அவரது கருத்து.'

கான்பூரில் பிரேம்சந்தின் தினசரி வாழ்க்கை முறையைப் பற்றி சிவராணிதேவி பின்வருமாறு எழுதுகிறார்:

விடியற்காலை 4 மணிக்கே அவர் எழுந்துவிடுவார். புகை பிடிப்பார். காலைக்கடன்களை முடித்துக்கொண்ட பின் குளிப்பார். காலை உணவாக எது கொடுத்தாலும் சாப்பிடுவார். பின்னர் எழுத உட்கார்ந்துவிடுவார். உழைப்பாளி ஒருவனின் மண் வெட்டி போல, அவரது பேனா தங்குதடையின்றி தன் பணியை ஆற்றும். நிகம், மற்றும் நண்பர்களை, மாலை நேரங்களில் சந்திப்பார். இரவு வீடு திரும்பும்போது நேரமாகிவிடும்.'

1907-இல் பிரேம்சந்தின் முதல் சிறு கதையான 'உலகத்தின் விலை மதிப்பற்ற ரத்தினம்' (துனியா கா சப்ஸே அன்மோல் ரத்ன) வெளியாயிற்று. அரபு நாட்டுக் கதைகளின் பாணியில் அமைந்திருந்தாலும், இச் சிறுகதை தர்மநியாயத்தை வலியுறுத்தியது.

துவக்கத்தில் அவர் எழுதிய கதைகள் தர்ம நியாய உணர்வை வலியுறுத்திய போதிலும், சமூக அம்சங்களில் சிறந்து விளங்கின. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் ஈசாப் கதைகள், ஹிதோப தேசம், பஞ்சதந்திரக் கதைகளின் சாயலைக் காணலாம். 'உலகத்தில் விலைமதிப்பற்றது எது?'—என்ற கேள்வியைத் தம் முதற் சிறுகதையில் எழுப்பிய பிரேம்சந்த், 'தன் மகன் கழுவில் ஏற்றப்படுவதைக் கண்டு ஓர் தந்தை உகுக்கும் கண்ணீரோ, கணவனுடன் உடன்கட்டை ஏறும் பத்தினியின் சாம்பலோ, இணையற்றது அல்ல. தாய்நாட்டின் விடுதலைக்காகச் சிந்தப்படும் அந்த ஒரு துளி ரத்தம்தான் ஈடு இணையற்றது' என்கிறார்.

'சோஜேவதன்' என்ற தலைப்பில் வெளியான சிறுகதைத் தொகுதி 1908ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 'ஜமானாவில்' விளம்பரப்படுத்தப்பட்டது. நாட்டுப் பற்று மிக்க ஐந்து சிறு கதைகள் இத்தொகுதியில் இடம் பெற்றிருந்தன. கான்பூரில் இருந்த காலத்தில் பிரேம்சந்த் அரசியல் விஷயங்களைப் பற்றியும் நிறைய எழுதிக் கொண்டிருந்தார். மாஜினி பற்றிய ஒரு உரை நடைச் சித்திரம், கரிபால்டி பற்றிய வரலாற்றுக் கட்டுரை, விவேகானந்தர் பற்றிய பாராட்டு என்று எழுதினார்.

1909-ஜுன் மாதம் பிரேம்சந்த் மகோபாவிற்கு மாற்றப் பட்டார். மாதச் சம்பளம் 50 ரூபாய். 'சோஜே வதனில்' உள்ள சிறுகதைகளை எழுதியதற்காக அரசாங்கம் அவர்பால் சீற்ற மடைந்தது. அரசாங்க ஊழியரான தன்பத்ராயின் புனை பெயர் தான் நவாப்ராய் எனக் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது. இனி அதிகாரிகளின் உத்தரவின்றி எதுவும் எழுதக்கூடாது எனக் கூறப்பட்டது. பிரேம்சந்த் மாவட்ட மாஜிஸ்ட்ரேட்டின் முன் ஆஜர் செய்யப்பட்டார். அவரது நூலின் எல்லாப் பிரதிகளையும் கைப்பற்றுமாறு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இனி 'நவாப் ராய்' என்னும் புனை பெயர் பயன்படாது என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. இத்தகையதோர் சூழ்நிலையில்தான் அவர், தற்சமயம் இந்தி வாசகர்களுக்கு மிகவும் பழக்கமாகிவிட்ட 'பிரேம்சந்த்' என்னும் புனை பெயரை ஏற்றுக்கொண்டார். 'நிகம்' கூறிய இப் புனை பெயரை அவர் மகிழ்ச்சியுடன் ஏற்றார்.

மாவட்ட அதிகாரியை தாம் சந்தித்தது பற்றி பிரேம்சந்த் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்:—ஒருநாள் இரவு எனது கூடா ரத்தில் அமர்ந்திருந்தேன். மாவட்ட அதிகாரியிடமிருந்து, தன்னை உடனே வந்து பார்க்கும்படி குறிப்பொன்று வந்தது. குளிர்காலம். மாவட்ட அதிகாரி அப்பொழுது சுற்றுப்பயணத்தில் ஈடுபட் டிருந்தார். உடனே வண்டியைப் பூட்டிக்கொண்டு இரவோ டிரவாகப் பயணத்தைத் தொடங்கினேன். 30, 40 மைல் பயணத் திற்குப் பின், மறுநாள் அவரைச் சந்தித்தேன். 'சோஜே வதன்'

புத்தகத்தின் ஒரு பிரதி அவர் முன்னால் வைக்கப்பட்டிருந்தது. இது என்னைக் கவலைக்குள்ளாக்கியது. 'நவாப் ராய்' என்னும் புனை பெயரில் நான் எழுதிக்கொண்டிருந்த காலம் அது. துப்பறியும் இலாக்காவினர் இந் நூலின் ஆசிரியரைத் தேடிக் கொண்டிருக்கின்றனர் என்ற செய்தி என் காதிற்கு எட்டியிருந்தது. என்னை அவர்கள் கண்டுபிடித்துவிட்டனர். அக் கணமே, இதுபற்றி விளக்கம் கூறவே நான் அழைக்கப்பட்டிருக்கின்றேன் என்பதை உணர்ந்து கொண்டேன். அதிகாரி என்னை நோக்கி, 'இப் புத்தகத்தை எழுதியது நீர்தானா?' என வினவினார்.

நான் மறுக்கவில்லை.

அதிலிருந்த கதைகளின் சுருக்கத்தைக் கூறுமாறு சொல்லப் பட்டது. இது முடிந்தவுடன் அந்த அதிகாரி சீறினார்:—'இக் கதைகள் இராஜதுரோகக் கருத்துகள் நிறைந்தவை என்பது தெரியுமா உனக்கு? ஆங்கில ஆட்சியில் வாழ்ந்து கொண்டிருக் கின்றாய் என்பதற்காக, நீ உன் அதிருஷ்டத்தை மெச்சிக்கொள்ள வேண்டும். முகலாய ஆட்சியாக இருந்தால் உனது இரு கரங் களும் துண்டித் தெறியப்பட்டிருக்கும். உனது கதைகள் ஓரச் சார்புடையவை. நீ ஆங்கில ஆட்சியை அவமதித்திருக்கின்றாய்.'

கான்பூரை விட்டு பிரேம்சந்த் மகோபாவிற்குப் புறப்பட்ட சமயம், அலகாபாத் இந்தியன் பிரஸ்ஸின் உரிமையாளரான சிந்தாமணி கோஷ் தாம் துவங்கவிருக்கும் பத்திரிகையின் உதவி ஆசிரியராகவிருக்கும்படி அவரைக் கேட்டுக்கொண்டார். பிரேம் சந்த் கோஷைச் சந்தித்தார். பத்திரிகைக்கு என்ன பெயர் தருவது என்பது பற்றி விவாதிக்கப்பட்டது. பிரேம்சந்த் 'பிர்தௌஸ்' எனப் பெயரிடலாம் எனக் கூறினார். ஆனால் தமது அரசாங்க ஊழியத்தை உதறிவிட அவர் தயங்கினார். முடிவில் 'பியாரேலால் சாகீரை' ஆசிரியராகக் கொண்டு 'அதீப்' என்ற பெயரில் அப் பத்திரிகை வெளிவந்தது. அரசாங்க ஊழியராகப் பணிபுரிந்த காலத்தில் எண்ணற்ற இடர்களையும், சிரமங்களையும் பிரேம்சந்த் அனுபவிக்க நேர்ந்திருக்கின்றன. பலமுறை வேலையை உதறிவிடும் உச்ச கட்டத்தைக் கூட அடைந்திருக்கிறார். இருப் பினும் அவரது கடைசி நிமிடத் தயக்கம் நமக்கு வியப்பை அளிக் கிறது. 'ஜமானா' விஷயத்திலும் இவ்விதமே நேர்ந்திருக்கின்றது. கான்பூரிலேயே தங்கி 'ஜமானா'வில் பணியாற்ற பொருளாதார ரீதியில், ஒரு சில உத்திரவாதங்களை அவர் வேண்டினார். இங்கும் கடைசியில் பின்தங்கிவிட்டார். மார்வாரிப் பள்ளியொன்றில் உதவித் தலைமையாசிரியர் பதவியை ஏற்கவும் மறுத்துவிட்டார். தலைமை ஆசிரியர் பதவியைத்தான் தம்மால் ஏற்கமுடியும் என்று அவர் நிகமிற்கு எழுதிவிட்டார்.

# 5

கவிழ்ந்து படுத்துக்கொண்டு, கால்களை உயரத் தூக்கி ஆட்டியவாறே பிரேம்சந்த் எழுதுவார். இதுபற்றி பியாரேலால் சாகீர் இவ்வாறு எழுதுகிறார்:—

'ஒருநாள் முன்ஷி பிரேம்சந்தின் இல்லத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தேன். இவ்வளவு தூரம் வந்திருப்பதால் அவரைப் பார்க்கலாம் என்று தோன்றியது. உள்ளே நுழைந்ததும், பலகையின் மீது அவர் கவிழ்ந்து படுத்திருப்பதைப் பார்த்தேன். இரு கால்களும் முழங்கால் வரை உயர்ந்து நின்றன. அவருக்கு முன்னால் இந்தி நூலொன்று திறந்து கிடந்தது. அவரது பேனா மிக விரைவாக ஓடிக் கொண்டிருந்தது. பேனாவின் வேகத்திற்கேற்ப இரு கால்களும் முன்னும் பின்னும் அதே கதியில் இயங்கிக் கொண்டிருந்தன. நூல் விமர்சனம் ஏதோ எழுதிக் கொண்டிருப்பதாக நினைத்த நான் 'யாரை விமர்சித்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என வினவினேன். அவர் சிரித்துக்கொண்டே 'நான் யாரையும் விமர்சிக்கவில்லை. ஊடல் கொண்ட ராணியை சமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறேன்' என பதிலளித்தார்.'

'ஊடல் கொண்ட ராணி' (ரூடி ராணி) என்ற இந்திக் குறுநாவலை அவர் உருதுவில் மொழி பெயர்த்துக் கொண்டிருந்தார். வீர தீரமிக்கவனும், சூழ்ச்சியும், பிடிவாதமும் நிறைந்த ஒரு முட்டாள் அரசனைப் பற்றிய கதை அது. ராஜபுத்திரர்களின் வீழ்ச்சியையும், அதன் சிதைவையும், ராஜபுத்திர நங்கைகளின் வீர சாகசத்தையும் அது சித்திரித்தது.

'பிரேம்சந்த்' என்ற புனைபெயரில் வெளியான முதற் சிறுகதை 'பெரிய இடத்துப் பெண்' ஆகும். (படேகர் கீ பேடி). துவக்க காலத்தில் அவர் எழுதிய கதைகள் அற்புத கற்பனைகள், அதிசயங்கள் நிறைந்தனவாக இருந்தன. இதன் பின் அவரது கவனம் சமூகப் பிரச்சினைகள்பால் திரும்பியது. அவரது எழுத்து தன்னிச்சையாக பொங்கி வந்தது. அதில் வேகமும் முதிர்ச்சியும் இருந்தன. மகோபாவில் இருந்த காலத்தில் புந்தேலர்களின் வீரம் செறிந்த வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு 'ராணி சாரந்தா' 'ராஜ ஹர்தயால்' போன்ற பல சிறுகதைகளை அவர் எழுதினார். புந்தேல்கண்டின் எழில்மிகு காட்சிகள், மரம் செறிந்த காடுகள், அருவிகள், ஊற்றுகள், ஆழ்ந்த பள்ளத்தாக்குகளின் காம்பீர்யம் நிறைந்த அழகை, இதய ஏட்டில் பதியுமாறு, வண்ணச்சித்திரங்களாக வடித்திருக்கிறார்.

1912-இல் 'ஜல்வா-ஈசார்' என்ற புதிய நாவல் நவாப்ராய் என்ற பெயரில் இந்தியன் பிரஸ்ஸிஞல் வெளியிடப்பட்டது. பிற் காலத்தில் இதுவே 'வரதான்' என்ற பெயரில் இந்தியில் வெளியா யிற்று. ஹிசாமுத்தீன் கோரி அவர்கள் குறிப்பிட்டுள்ள 'பிரதாப் சந்த்' என்ற நாவல் இதுவாகத்தான் இருக்கவேண்டும். ஏனென்ருல் 'பிரதாப்சந்த்' என்பது இந்நாவலின் கதா நாயகனின் பெயராகும், பிரேம்சந்தின் எழுத்தில் ஒரு குறிப்பிடத்தக்க வளர்ச்சி இதில் காணப்படுகிறது. மாபெரும் மக்கள் இயக்கங் களின்பால் முதன்முதலாக அவருக்கு ஏற்பட்டிருந்த மனக் கிளர்ச்சி இதில் வெளியாகியுள்ளது. 'அதிருப்தி என்னும் விதை உரம்பெற்று மரமாக வடிவமெடுக்கிறது'. 'பொங்கித் திரண்டெழும் மக்களின் ஆத்திரத்திற்கு முன் உலக சக்திகள் பணிய வேண்டி யிருக்கிறது' என்பது போன்ற கனல் தெரிக்கும் கருத்துக்கள் பல 'ரங்க பூமி' 'கர்ம பூமி' போன்ற அவரது பிற்காலப் படைப்பு களிலும் காணப்படுகின்றன. இதே சமயத்தில் பிரேம்சந்திற்கே இயல்பான ஹாஸ்ய உணர்வும், கிண்டலும் ஆங்காங்கே பளிச் சிடுவதைக் காண்கிருேம். மனேவியின் அறையில் திருடமுயலும் கணவன் அடிபடுவது, தோட்டக்காரனின் பெண்ணுடன் அவன் சரசமாட முயல்வது, டிக்கட் வாங்காமல் ரெயிலில் ஏறிவிட்டு, டிக்கட் பரிசோதகர் ரெயில் பெட்டியில் ஏறியதும், ஓடுகிற ரெயிலிலிருந்து குதித்துவிடுவது போன்ற பல சம்பவங்களே இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

கிராமிய வாழ்க்கை, ஹோலிப் பண்டிகை, ஆரவாரமிக்க சூழலின் காட்சிகள் போன்றவை இந் நாவலில் இயற்கையாக அழகாக வருணிக்கப்பட்டுள்ளன. அடக்கி ஒடுக்கி வைக்கப்பட் டிருந்த மக்களின் துன்பமும், வேதனேயும் மிகுந்த கிராமத்தைப் இதில் அவர் படம் பிடித்துக் காட்டுகிருர். பாத்திரப் படைப்பு, குணசித்திரம் இரண்டிலும் குறிப்பிடத்தக்க வளர்ச்சி காணப் படுகிறது. பிர்ஜன், சுவாமி விவேகானந்தரைப் பிரதிபலிக்கும் பாலாஜி—இருவரும் மனதைக் கவரும் பாத்திரங்களாவர்.

பிர்ஜன் தன் கணவன் கமலா சரணனுக்கு எழுதும் கடிதத்தில் கிராமத்தின் அவலநிலேயை எடுத்துக் காட்டுகிருள். 'நான் கேள்விப்பட்டது வேறு, இங்கு கண்டது வேறு. மண் குடிசைகள், வீட்டிற்கு முன்ஞல் குவிந்து கிடக்கும் குப்பைக் கூளங்கள், சேற்றில் புரளும் எருமைகள், ஒட்டி உலர்ந்து கிடக்கும் மாடுகள், இவையெல்லாம் இங்கிருந்து போய்விட வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றன. மனிதர்களின் வாழ்வும் சீர் குலேந்துதான் கிடக்கிறது. வெறும் எலும்புந் தோலுமாக அவர்கள் காட்சி அளிக்கிருர்கள். ஏழ்மைக்கும், துர்பாக்கியத்திற்கும் எடுத்துக்காட்டாக மனிதவடிவமெடுத்து அவர்கள் நிற்கிருர்கள்.

கிழிசல் இல்லாத துணி அணிந்தவர் ஒருவரைக்கூடக் காணேம். வியர்வை சிந்தி, நாள் முழுவதும் உழைத்துப் பாடுபட்ட பின்னும் வயிறு நிரம்ப உணவு கிடைக்காத இந்நிலை எத்தகைய துர்பாக்கியமானது.'

தயை தாட்சணியமின்றி உள்ளதை உள்ளபடி சித்திரித்தல், உயிர்த்துடிப்புள்ள கதாபாத்திரங்கள், நாட்டின் சீர்கெட்ட அவல நிலை, கொதித்தெழுந்த மக்களின் எழுச்சி, மக்கள் இயக்கத்தின் மகத்தான வேகம், என பிரேம்சந்தின் பிற்கால எழுத்துகளில் காணப்பட்ட அவரது பண்பட்ட கலைத்திறனுக்கு காரணமான அம்சங்கள் யாவும் இதில் நிறைந்துள்ளன.

பிரேம்சந்தின் வாழ்க்கை வரலாற்றைத் தக்க பிரமாணங் களுடன் எழுதியிருக்கும் மதன்கோபாலின் கூற்றுப்படி 'வரதான்', 'சியாமா' என்ற நாவலின் பிற்காலப் பதிப்பாகவும் இருக்கலாம். பிரதாப்சந்தின் அன்னையான 'சுவாமா' தான் 'சியாமா'வாகி இருக்கலாம், என்று அவர் நினைக்கிறார். இந்நாவலே 'பிரதாப் சந்த்' என்ற பெயரிலும் ஒருக்கால் குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

மகோபாவிலிருக்கும்போது பிரேம்சந்த் கடுமையான வயிற்றுப் போக்கினுல் பீடிக்கப்பட்டார். வாழ்க்கை முழுவதிலும் இந்நோய் அவரை விடவில்லை. ஒன்றரை ஆண்டுக் காலம் நீடித்திருந்த இந் நோய்க்குப் பின்னர் அவரது உடல்நிலை மோசமாகிவிட்டது. இந் நிலையில் பஸ்தி மாவட்டத்தில் உள்ள 'தராய்'க்கு அவர் மாற்றப்பட்டார். ஆரோக்கியத்திற்கு மகோபாவைவிட இது சிறந்ததாகத் தோன்றவில்லை – நோய்க்கு வைத்தியம் செய்து கொள்ளவும், உடல்நிலை தேறுவதற்காகவும் அவர் பல மாதங்கள் அரைச் சம்பளத்தில் ரஜா எடுத்துக்கொண்டார். பஸ்தியிலிருந்த போது '25 கதைகள்' (பிரேம் பிச்சீசி)யின் முதற் தொகுதி வெளியாயிற்று. 'பெரிய இடத்துப் பெண்' (படே சர் கீ பேடி) 'உப்பு வரி அதிகாரி' (நமக் கா தாரோகா) 'ராணி சாரந்தா', 'ராஜா ஹர் தயால்' போன்ற சிறந்த சிறுகதைகள் இத்தொகுப்பில் உள்ளன.

பஸ்தியிலிருந்தபோதுதான் பிரேம்சந்த் இந்தியில் எழுதத் தொடங்கினுர். இங்கு மாவட்ட தாசில்தாராகப் பணியாற்றிய, மன்னன் துவேதி கஜபுரியுடன் கொண்ட நட்புறவு, அவரது கவனத்தை இந்தியின்பால் திருப்பியது. உருதுவில் எழுதுவது பொருளாதார ரீதியிலும் மிகுந்த கசப்பான அனுபவமாக இருப் பதையும் அவர் உணரத் தொடங்கினுர்.

பஸ்தியில் இருந்த சமயத்தில் அவர் இண்டர்மீடியட் பரீட்சையில் தேர்வு பெற்றுர். 'பிரேம் பச்சீசி'யின் இரண்டாவது தொகுதியில் வெளியான பல அரிய சிறுகதைகளையும் எழுதினுர்.

பொருளாதார நெருக்கடி அவரை எவ்வளவு பாதித்திருந்தது என்பது நிகமுக்கு அவர் எழுதிய கடிதத்திலிருந்து தெரிகிறது:

'நேற்று முந்திய நாள் எழுதிய கடிதத்தில் எனக்குச் சேர வேண்டிய அன்பளிப்பைப் பற்றி குறிப்பிட்டிருந்தேன். மே—ஜூனில் மொத்தம் 24 பத்திகள் எழுதியுள்ளேன். எனது ஜீரண சக்தி வெகுவாக பாதிக்கப்பட்டிருப்பதால் ஜூலையில் என்னால் எழுதமுடியாமல் போகலாம். ஒரு மணி நேரம் கூட என்னால் உட்கார முடியவில்லை. தீர்மானிக்கப்பட்டுள்ள விகிதப்படி எனக்குச் சேரவேண்டிய தொகை சுமார் 8 ரூபாய் ஆகிறது. இதில் மூன்று நான்கு ரூபாய்க்கு மேல் விலையில்லாத ஓர் கைக் கடிகாரமும், நான்கு அல்லது நாலரை ரூபாய்க்கு மேற்படாத விலையில் ஒரு ஜோடி பூட்சும் வாங்கி அனுப்பினால் நன்றி உள்ள வனாக இருப்பேன். இவ்விரண்டையும் சேர்த்து ஒரே பார்சலில் அனுப்பலாம். சின்னவன் (பிரேம்சந்தின் தம்பி) என் பூட்சுகளை எடுத்துச் சென்றுவிட்டான்; தற்சமயம் வெறுங்காலுடன் நடக்கிறேன்.'

இக் கடிதம் பிரேம்சந்தின் சிரமதசையை நன்கு உணர்த்து கின்றது. நிகம் நடத்திவந்த 'ஆஜாத்' என்னும் வாரப்பத்திரிகை யில் பணிபுரிய விரும்பிய பிரேம்சந்த் தம் வேலையைத் துறந்துவிட விரும்பினார். நிகம் தமது பத்திரிகைகளான 'ஆஜாத்' 'ஜமானா' இரண்டையும் பிரேம்சந்தின் ஒத்துழைப்புடன் வெளியிட விரும் பினார். எனினும் அவரால் பொருளாதார உத்திரவாதமெதும் தர இயலவில்லை. தற்சமயம் பிரேம்சந்த் படைத்த இலக்கியங்கள் அவரது வம்சத்தினருக்குத் தங்கச் சுரங்கங்களாக இருக்கின்றன என்றாலும், அவர், தாம் வாழ்ந்த காலத்தில் மலிவான காலணி யையோ, கடிகாரத்தையோ வாங்குவதற்குச் சிரமப்பட்டார்.

## 6

1916-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 18-ஆம் தேதி பிரேம்சந்த் நார்மல் பள்ளியில் உதவியாசிரியராகப் பணியாற்ற கோரக்பூர் சென்றார். மாணவர் விடுதியின் கண்காணிப்பாளராகவும் பொறுப் பேற்றார். இங்கு அவர் மிக்க மகிழ்ச்சியோடு இருந்தார் என்று கூறலாம். வீடு வசதியாக அமைந்திருந்தது. வீட்டைச் சுற்றிலும் இருந்த திறந்தவெளி அவரது ஆரோக்கியத்திற்கு உகந்ததாக இருந்தது. அவரது சிற்றன்னையும் மனைவியும் ஓயாமல் சச்சர விட்டுக் கொண்டிருந்தாலும், அவருக்கு இது பழக்கமாகிவிட் டிருந்தது. இங்குதான் மகாவீர் பிரசாத் போத்தார் பிரேம்சந்தின்

நண்பரானுர். இந் நட்பு, பிரேம்சந்தை, இந்தியுடன் இன்னும் நெருக்கமாகப் பிணைத்தது. ஷேக் சாதியைப் பற்றி பிரேம்சந்த் சிறு நூலொன்று எழுதியிருந்தார். டால்ஸ்டாயின் சில கதைகளை இந்தியில் மொழிபெயர்த்தார். பிரேம்சந்த் பச்சீசியிலிருந்து[1] சில கதைகளை இந்தியில் எழுதி வெளியிட்டார். 1917-இல் வெளியான 'ஏழு தாமரைகள்' (சப்த சரோஜ்) தான் இந்தியில் வெளியான அவரது முதல் கதைத் தொகுதியாகும். இவை (1) பெரிய இடத்துப் பெண் (படேகர் கீ பேடி) (2) சக்களத்தி (சௌத்) (3) நேர்மைக்கு கிடைத்த தண்டனை (சஜ்ஜனதா கா தண்ட்) (4) பஞ்ச் பரமேஸ்வர் (5) உப்புவரி இன்ஸ்பெக்டர் (நேமக் கா தாரோகா) (6) உபதேசம் (7) பரிட்சை. அவரது படைப்பில் தனிச் சிறப்புப் பெற்று விளங்கும் கதைகளிலே இவை ஒரு சில.

இக் கதைகளில் மனித சுபாவத்தின் இயல்பான நற்பண்புகளை அவர் வலியுறுத்தியிருக்கிறுர். 'பெரிய இடத்துப் பெண்' என்னும் சிறுகதையின் கதாநாயகியான ஆனந்தி, நாட்டுப்புற இளைஞனுகிய தன் முரட்டு மைத்துனனிடம் சீற்றம் கொள்கிறுள். அவன் அவளை அதட்டுகிறுன். மரக்கட்டைக் காலணியை அவள் மீது வீசுகிறுன். இதனுல் மூண்ட கலகத்தில் குடும்பம் சிதறுண்டு போவதையும், அந்த இளைஞன் தன் செய்கைக்காக வருந்துவதையும், கண்ணுற்ற ஆனந்தி அவனை மன்னிப்பது மட்டுமல்ல, தன் கணவனையும் சாந்தப்படுத்துகிறுள்.

'உப்பு வரி இன்ஸ்பெக்டர்' (நமக் கா தாரோகா) கதையின் கதாநாயகனுன உப்பு வரி இன்ஸ்பெக்டர், லஞ்சத்தின் பிடிக்குள் சிக்காத நேர்மைவாதி. தன் கடமையை நேர்மை தவருமல் செய்ததற்காக அவன் அரசாங்கத்தினரால் வேலை நீக்கம் செய்யப்படுகின்றுன். ஆனுல் ஒழுக்கமற்ற சேட் அவனைப் போன்ற நேர்மையாளனைத் தனது ஊழியராக ஏற்றுக்கொள்ள முன்வருகின்றுன். இதுபோல் நேர்மையும், சீலமும், பிரேம்சந்தின் உலகத்தில் பாராட்டுதலையும், உயர்வையும் பெறுகின்றன. உண்மையான வாழ்வில் இத்தகைய அற்புதங்கள் நிகழ்வதில்லை. 'பஞ்ச் பரமேஸ்வர்' கதையில் கிராமப் பஞ்சாயத்துத் தலைவன், நீதி வழங்க முற்படும்போது, நியாயபூர்வமான உந்துதலினுல் தனது தனிப்பட்ட பகைமையை மறந்து நியாயம் வழங்குகிறுன். ஏற்றத்தாழ்வுகள், இன வகுப்பு வேறுபாடுகள், பாரபட்சமான போக்குகள், மூட நம்பிக்கைகள் கொள்கைகள் மலிந்து, பிளவுபட்டு நிற்கும் கிராமத்தில்—சமுதாயத்தில் இத்தகைய நீதியையும், நியாயத்தையும் காண்பதரிது.

பிரேம்சந்தின் இயல்பான இலட்சியவாதமும், நல்ல இதயமும், வாசகர்களை வெகு உயரத்திற்குக் கொண்டு சென்று

[1] பிரேம் பச்சீசி: 25 கதைகளின் தொகுப்பு

விடுகின்றன. அவரது படைப்புகள் சமுதாயத்தின் நன்மைக்கும் உயர்விற்கும் உத்வேகத்தை ஊட்டுகின்றன. நேர்மையையும், நீதியையும் ஆதரித்த அவர், தீயவற்றையும் அநீதியையும் வன்மையாகக் கண்டித்தார். வாழ்க்கையை அவர் யதார்த்த நோக்கில் சித்திரித்தார் எனினும், நன்மைக்கும் தீமைக்குமிடையே நடைபெறும் உள்மனப் போராட்டங்களையும் நன்கு உணர்ந் திருந்தார். தீய சக்தி நசித்து, நல்லியல்புகளே முடிவில் வெற்றி பெறும் என்பதில் அவருக்கு நம்பிக்கை இருந்தது.

பம்பாயின் பிரசித்திபெற்ற புத்தக வெளியீட்டாரான 'ஹிந்தி ரத்னகர் கிரந்த'—அவரது இன்னெரு இந்திச் சிறுகதைத் தொகுதியை வெளியிட்டது. இத் தொகுதியின் தலைப்பு 'நவநிதி'. புந்தேல் கண்டின் மணம் கமழும் 'ராஜா ஹர்தயால்', 'ராணி சாரந்தா' போன்ற சிறந்த சிறு கதைகள் இத் தொகுதியில் இடம் பெற்றன.

இதை அடுத்து 'பிரேம் பூர்ணியா' என்ற தலைப்பில் பிரேம் சந்த் இந்தியில் தமது சிறுகதைகளின் இன்னெரு தொகுப்பை வெளியிட்டார். 'படே கர் கீ பேடி', 'பஞ்ச் பரமேஸ்வர்' பாணியில் எழுதப்பட்ட அற்புதமான சிறுகதையான 'கடவுளின் நியாயம்' (ஈசுவரி நியாய்) இத் தொகுதியில் இடம்பெற்றுள்ளது. இக்கதையில் நேர்மை தவருத, கடமையுணர்வு மிக்க, செல் வந்தர் வீட்டு காரியஸ்தனெருவன், தடம்புரண்டு, காலம் சென்ற எஜமானரின் மனைவியையும் குழந்தைகளையும் வஞ்சிக்க முற்படு கின்ருன். தன் வசமுள்ள தஸ்தாவேஜிகளை மறைத்து, சொத்துக் களைத் தன்வசப்படுத்திக் கொள்ளவும் திட்டமிடுகின்ருன். வழக்குத் தொடரப்படுகின்றது. நீதிமன்றத்தில் தன் கட்சி வலிவிழந்து போன நிலையில் அவ் விதவை, நீதிமன்றத்தின் முன்னிலையில் அவனது மனச்சாட்சியைத் தட்டி எழுப்புகின்ருள். அந்த சொத்துக்கள் தன்னுடையவை எனச் சத்தியம் செய்யுமாறு அவள் சவால் விடுகிருள். அவன் செயலிழந்து போய்விடுகின்ருன். —அவனுல் சத்தியம் செய்ய முடியவில்லை. முடிவில், அவனது உள்ளத்திலே மறைத்து, புதையுண்டு போயிருந்த, நேர்மையும் சத்தியமும் தான் வெற்றிபெறுகின்றன என ஆசிரியர் காட்டு கிருர். பிரேம்சந்தின் முத்திரை பதிந்த இத்தகைய குணசித்திரப் படைப்புகளை அவரது கதைகளில் ஆங்காங்கே காணலாம். நல்லதும் கெட்டதும் கலந்தவன் மனிதன். தடுக்கி விழுந்தாலும் சமாளித் தெழுகின்ருன்—நாகரிகத்தின் மேற்பூச்சில் பதுக்கி வைக்கப்பட்டிருந்தாலும் பல்வேறு சந்தர்ப்பங்களில் நல்லியல்புகள் வெளிப்படும் என்ற கருத்து, மனிதனேடு ஒட்டிப்பிறந்த நேர்மை யுணர்வின் மீதுள்ள இந் நம்பிக்கை, ஏறத்தாழ ரூஸ்ஸோவின் கருத்தைச் சார்ந்தது எனலாம்.

1916 க்கும் 1917 க்குமிடையே பிரேம்சந்த் தம் மகத்தான நாவல்களில் முதலாவதான (பாஜாரே ஹுஸ்ன) சேவாசதனத்தை எழுவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். முதலில் இதை உருதுவில்தான் எழுதினுர், என்றுலும், இதன் இந்திப் பதிப்புத் தான் முதலில் வெளியாயிற்று. உருதுவில் இதை வெளியிடப் பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்த சமயத்தில் 1918-இல் இந்தி புத்தக ஏஜென்ஸியார் இதை வெளியிட்டனர். அவர்களிடமிருந்து இந் நாவலுக்கு பிரேம்சந்த் 400 ரூபாய் பெற்ருர்.

'சேவாசதனம்' தான் இந்தியிலோ, உருதுவிலோ முதன் முதலாக வெளிவந்த சமூக நாவலாக இருக்கவேண்டும். இதுவரை அற்புதங்களும், பரபரப்பூட்டும் சாகசங்களும்தான் இந்தி நாவல் இலக்கியத்தை ஆட்கொண்டிருந்தன. இந் நாவலில் எதையும் ஆதரித்தோ, கண்டித்தோ, கூருது வாழ்வின் கசப்பான உண்மைகளே, துணிவுடன் எதிர்நோக்குகின்ற ஆசிரியர், அதே சமயத்தில் வீழ்ச்சிதான் மனிதவாழ்வின் முடிவென்பதல்ல, மனிதனுல் தன் வாழ்க்கையை மாற்றி அமைத்துக்கொள்ள முடியும் என்பதில் தமக்குள்ள நம்பிக்கையைத் தெரிவித்துள்ளார். கதாபாத்திரங்கள் உயிர்த்துடிப்பும், அனுபவ முதிர்ச்சியும் பெற்றவர்களாக இருக்கின்றனர். இந்தி நாவல் இலக்கியம் பக்குவநிலையை அடைந்துவிட்டதென்பதற்கு இந் நாவல் ஓர் அத்தாட்சியாக விளங்கியது.

இந் நாவலின் கதாநாயகி சுமன் வசதியான வாழ்க்கைக்கும், நல்ல துணிமணிகளுக்கும் ஆசைப்படுகிருள். அவளது இந்த ஆசைகளே நிறைவேற்ற முடியாத ஒரு ஏழைக்குத் திருமணம் செய்துவிக்கப்படுகிருள். சுமனின் தந்தை ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரி. லஞ்சம் போன்ற தீய வழக்கங்களே அவர் எதிர்த்ததால் தம் இலாக்காவினரின் அதிருப்திக்காளாகின்ருர். மகளின் திருமணத்திற்காக தனது கொள்கைகளினின்று அவர் பிறழ்ந்துவிடுகிருர்—பிடிபட்டு, தண்டனேக்குள்ளாகிருர். சிநேகிதியின் வீட்டிலிருந்து சுமன் வீடு திரும்பத் தாமதமாகிவிடுகிறது. ஏற்கனவே மனேவியின் அதிருப்தியினுல் மனஞ் சலித்திருந்த கணவன் அவளே அவ்விரவு நேரத்திலேயே வீட்டைவிட்டு வெளியேற்றிவிடுகின்ருன். சிநேகிதியின் வீட்டில் சுமன் புகலிடம் தேடுகின்ருள்—அது கிடைப்பதில்லே. எதிர்வீட்டிலிருந்த நாட்டியக்காரிதான் அவளுக்குத் தன் இல்லத்தில் இடந்தருகிருள். இந் நிலே, சுமனின் கண்ணியமானக் குடும்பப் பெண் என்ற நிலேக்கு முத்தாய்ப்பு வைத்துவிடுகிறது. மீண்டும் புனர்வாழ்வு வாழ அவள் முயற்சிக்கும்போது, சனுதன மனப்பான்மை கொண்ட வட்டாரங்களிலிருந்து கடும் எதிர்ப்பு தோன்றுகிறது. நாட்டியக்காரிக்கு அடிபணிந்துப் போற்றத் தயாராக இருக்கும் இவர்கள்,

வாழப் போராடும் சுமனை வெறுக்கின்றனர். முடிவில் நேர்மையும் நாணயமுமாக ஒருவர் வாழ வகை புரியும் ஓர் இலட்சிய சமுதாயத்தில், அவள் தனது தீராத் துன்பங்கட்குத் தீர்வு காண்கின்றாள். சமுதாய வாழ்க்கை உயிரோட்டம் நிறைந்ததாய், மனத்தைத் தொடும் முறையில் தீட்டப்பட்டுள்ளது. பிரேம்சந்தின் ஆழ்ந்த மனிதாபிமானமானது, உணர்வுபூர்வமாக, அவர் உருவாக்கிப் படைத்துள்ள பாத்திரங்களின், இன்ப துன்பங்களில், மாளாத் துயர்களில், வாழ்வின் நெடுபயணம் முடியும் வரையில் இரக்கம் நிறைந்த அனுதாபத்துடன் தொடர்கின்றது. இந் நாவலிலே வரும் ஜீவன் ததும்பும், பல கதாபாத்திரங்கள் உறுதியும், வலிமையும் கொண்டவர்களாய், இந் நாவலுக்கு அலாதியான தொரு சிறப்பையும், விருவிருப்பையும், நாடகத் தன்மையையும் அளிக்கின்றனர்.

சேவாசதனை எழுதிமுடித்த சில மாதங்களுக்கெல்லாம் பிரேம் சந்த் முதலில் தான் உருதுவில் எழுதிய 'கோஷாய்-ஏ ஆவியத்' என்னும் நாவலை, 'பிரேமாசிரமம்' என்னும் தலைப்பில், இந்தியில் எழுதத் தொடங்கினார். 1918 மே இரண்டாம் தேதி எழுதத் துவங்கப்பட்ட இந் நாவல் 1920 பிப்ரவரி 25 தேதி முடிவடைந்தது. வீறுகொண்டெழுந்த தேசியப் போராட்டத்தைப் பின்னணியாகக் கொண்டுள்ள இம் மாபெரும் நாவலில், காந்தியடிகளின் ஆழ்ந்த முத்திரை பதிந்துள்ளது. இந் நாவலின் கிதா நாயகனை பிரேம்சங்கரை ஆசிரியர் தமது இலட்சியக் கதாநாயகனாக உருவாக்கியுள்ளார். இவன் பொறுமைசாலி; துன்பங்களைக் கண்டு சலியா உள்ளம் படைத்தவன்; அநீதிக்குத் தலை சாய்க்காதவன். நிலவுடைமையாளர்களின் பழித் தோற்றலாக இருப்பினும், குடியானவர்களின் பால் ஆழ்ந்த அனுதாபங் கொண்டவன். இந் நாவலில் ஆசிரியர் கிராமியச் சமுதாயத்தின் எண்ணற்ற துன்பங்களை விரிவாகக் காட்டியுள்ளார். சுரண்டல் பேர்வழிகளும், கொள்ளை லாபம் அடிக்கும் சந்தர்ப்பவாதிகளும் கூடி, குடியானவர்களைக் கசக்கிப் பிழிந்துவிடுகின்றனர். ஞான சங்கர், தீமைகளுக்கும், கொடுமைகளுக்கும் ஒரு எடுத்துக் காட்டாக விளங்கும் பாத்திரம். ஆனால் பிரேம்சங்கர் தன் தூயமனத்தினாலும், மனிதத் தன்மையினாலும், தீமைகள் யாவற்றையும் முறியடித்து, முடிவில் வெற்றி காண்கிறான். அவன் மேற்கொள்ளும் சிரமங்கள், அவனது எதிரிகளையும், நண்பர்களாக மாற்றிவிடுகின்றன. முடிவில் மண்ணை நம்பி, பாடுபட்டு தன் உழைப்பால், வாழ்விற்கு வகை தேடமுடியும் என்றதொரு நிலையைத் தரும் பிரேமாசிரமத்தை அவன் நிலைநாட்டுகின்றான்.

கோரக்பூரில் இருந்த சமயத்தில், ரகுபதி சகாய் 'பிராக்' பிரேம்சந்தின் நண்பரானார். அலகாபாத்தில் முயூர் சென்ட்ரல்

காலேஜில் படித்துக்ககொண்டிருந்த பிராக் அச் சமயம் கோடை விடுமுறைக்காக கோரக்பூர் வந்திருந்தார். நட்பு பற்றி பிராக் இவ்வாறு கூறுகிறுர் :—

'பிரேம்சந்தின் இல்லம் எனக்கு என் வீடுபோல்தானிருந்தது. தினமும் நண்பகலிற்குப் பின் அங்கு போய்விடுவேன். வீட்டிற்கு வெளியே திறந்த இடத்தில் இரண்டு மூன்று நாற்காலிகள் கிடக்கும். பிரேம்சந்த் ஒன்றில் அமர்ந்துகொள்ள, நானும் அருகில் உட்கார்ந்து கொள்வேன். பிறகு உரையாடத் துவங்கிஞல் மணி போவதே தெரியாது. சூரியன் அத்தமிப்பதற்கு இரண்டு, மூன்று மணி நேரம் முன்பாக நான் அவரது வீட்டிற்குச் செல்வேன். கதிரவன் மலேவாயிலில் விழுந்தருணத்தில்தான் பிரேம்சந்த் தம் இருக்கையை விட்டெழுந்திருப்பார். கையில் காசித்துவாலேயை எடுத்துக்கொண்டு, அருகிலிருந்த உருது பஜாரில் காய்கறிகள் வாங்கச் செல்லுவார். நானும் வீடு திரும்புவேன்.'

பிரேம்சந்த் உயிரோடிருந்தவரை இந் நட்பு நீடித்திருந்தது. விமர்சனம் போன்ற பல துறைகளில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் பிராக் ஒரு கவிஞர். பிரேம்சந்த் உருதுக் கவிதையைத் தக்கபடி பிரதிபலிக்கவில்லே என்பது அவரது குறை.

லாகூரைச் சார்ந்த இம்தாஜஅலி 'தாஜ்' என்பவர் பிரேம் சந்தின் மற்ருெரு நெருங்கிய நண்பராவார். 'கஹ்கஷாம்' என்ற பத்திரிகைக்கு அவர் ஆசிரியராக இருந்தார். பிரேம்சந்த் இப் பத்திரிகையில் எழுதுவதுண்டு. 'தாஞய் இஷாத்' என்ற பெயரில் 'தாஜ்'க்கு ஒரு சொந்தப் பிரசுராலயம் இருந்தது. 'பஜாரே ஹுஸ்ன' பிராம் பச்சீசி (இரண்டாம் தொகுதி), கோஷாய்—ஏ—ஆபியத், என பிரேம்சந்தின் பல நூல்களே அவர் உருதுவில் வெளியிட்டார். நேரிடையாகச் சந்திப்பதற்குப் பல ஆண்டு களுக்கு முன்பிருந்தே இருவருக்குமிடையே கடிதப்போக்குவரத்து இருத்துவந்தது.

கோரக்பூரில் இருந்த சமயத்தில் தான் அலகாபாத் பல்கலேக் கழகத்தின் பி.ஏ. பட்டப்படிப்பில், பிரேம்சந்த் இரண்டாம் வகுப்பில் தேர்வு பெற்ருர். தேசாவேச உணர்வு கொந்தளித்துக் கொண்டிருந்த காலம் அது. நார்மல் பள்ளியில் நடைபெற்ற வெற்றிவிழாக் கொண்டாட்டத்தில் பிரேம்சந்க் கலந்துகொள்ள வில்லே. கல்வி இயக்குனரான இருந்த மிஸ்டர் மெகன்ஸி, பள்ளியின் தலேமையாசிரியரிடம் இதுபற்றி எழுத்துமூலம் விளக்கம் கோரிஞர். இது தவிர இன்ஞெரு விஷயத்திலும் பிரேம்சந்திற்கும் கலெக்டருக்குமிடையே தகராறு எழுந்தது. பிரேம்சந்தின் பசு கலெக்டரின் மாளிகை வளவிற்குள் சென்று மேய்ந்துவிட்டது. கலெக்டர் அதைச் சுட்டுவிடுவேன் என்று பயமுறுத்திஞர்.

தம்முடைய மாட்டைப் பிறர் வீட்டு எல்லைக்குள் மேயவிட்டு, வழக்காடுவது சரியல்லவெனினும் பிரேம்சந்த் உண்மையில் ஆங்கில அதிகார வர்க்கத்தினரின், திமிரான போக்கிற்கும், துடுக்குத் தனத்திற்கும் எதிராக நாட்டின் தன்மான உணர்வைக் காக்க வேண்டிப் போராடத் துணிந்தார்.

இதேபோன்ற மற்றொரு சம்பவத்தைப் பற்றி அவரது மாணவரொருவர் கூறுகிறார்:—'மாவட்ட கலெக்டரின் மாளிகைக்கும், நார்மல் பள்ளியின் சுற்றுவளைவுக்குமிடையே நல்லதொரு பாதையிருந்தது. தென்கிழக்கிலிருந்து, வடமேற்காக, நகரத்தை ஒட்டிச் சென்ற இப் பாதையில், தினமும் மாலை 4 மணிக்கு கலெக்டர் உலாவச் செல்லுவார். இப்பாதையின் தெற்குப்புறத்தில் உதவித் தலைமையாசிரியர் முன்ஷி பிரேம்சந்தின் இல்லம் இருந்தது. நான்கு மணி அளவில் எழுத்தாசிரியர் பெருமான் வராந்தாவில் அமர்ந்து ஏதாவதொரு நாவலை ஆழ்ந்து படித்துக்கொண்டிருப்பார். ஒருநாள் கலெக்டர் ஆசிரியரைக் கூப்பிட்டனுப்பினார். அவர் வந்ததும் 'நான் இந்த வழியாகத் தினமும் செல்கிறேன், நீர் ஏன் எனக்கு வணக்கம் தெரிவிப்பதில்லை?' என வினவினார். 'நான் எனது வேலையில் மூழ்கியிருந்தேன். அரசாங்க அதிகாரியாக இருந்தாலென்ன? பாதையில் செல்லும் ஒவ்வொரு பாதசாரிக்கும் வணக்கம் செலுத்தவேண்டியது என் கடமையன்று' என ஆசிரியர் பதிலளித்தார். (இன்னொரு கூற்றின்படி, இதே சம்பவம், பள்ளித் துணை ஆய்வாளரைக் குற்றவாளியாகக் காட்டுகிறது).

மறுநாள் மாவட்ட கலெக்டருக்கு எதிராக பிரேம்சந்த் சிவில் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். முடிவில் இருவருக்கும் ராசியாகி, விஷயம் அத்துடன் விடப்பட்டுவிட்டது.

பிரேம்சந்த் அரசரங்க ஊழியத்தை துறந்துவிடும் எண்ணம் கொண்டிருந்தார் என்பதற்கு இச் சம்பவங்கள் அறிகுறிகளாகும்.

## 7

அரசாங்க ஊழியத்தின் பால் மனத்திற்குள் வெறுப்புக் கொண்டிருந்த பிரேம்சந்த் இலக்கிய சேவையிலும், பத்திரிகையிலும் முழுமூச்சுடன் பணிபுரிய ஆசைப்பட்டார். 'ஜமானா'வில் பொருளாதார நிலை திருப்திகரமாகவும், எதிர்காலத்திற்கு நம்பிக்கையூட்டுவதாகவும் இல்லை. ஐக்கிய மாகாணத்தரசு நடத்திய (வார் ஜெர்னல்) யுத்தகாலச் செய்தி பத்திரிகையின் உருது இதழின் ஆசிரியர் பொறுப்பை ஏற்கும்படி நிகம் ஒருமுறை

பிரேம்சந்திற்கு யோசனை கூறினர். பிரேம்சந்த் இதனை மறுத்து விட்டார். நிகம், மார்வாரி பள்ளியொன்றில் உதவியாசிரியர் பதவியை ஏற்கும்படி கூறினர். ஆனால் பிரேம்சந்த் இதையும் மறுத்துவிட்டார். குறைந்தபக்ஷம் தலைமையாசிரியர் பதவி தந்தால்தான், தமக்குப் போதிய அவகாசமும், தனித்துச் செயலாற்றும் சுதந்திரமும் கிடைக்குமென அவர் நினைத்தார்.

நிகமிற்கு 'வார் ஜெர்னல்' பற்றிக் குறிப்பிட்டு பிரேம்சந்த் எழுதுகிறார் — 'துரதிர்ஷ்டவசமாக இதை தேசியப் பணியாக நினைத்து என்னால் ஏற்றுக்கொள்ள இயலாமலிருக்கிறது. ஆரம்ப கால எழுத்தாளர்களுக்கு மொழிபெயர்ப்புத் துறை ஏற்றதாகும். இதற்கும் பத்திரிகைத் துறைக்கும் சம்பந்தமில்லை. தயவு செய்து என்னை மன்னித்துவிடுங்கள்.

இதற்கு முன் எழுதிய ஒரு கடிதத்தில் 'அரசாங்க செய்திப் பத்திரிகையாளனாக இப்பொழுது என்னால் பணியாற்ற முடியாது; யுத்தத்தைப் பற்றிய கட்டுரைகளை எழுதவும் இன்று எனக்கு அவகாசம் இல்லை. நான் என் பழைய தடத்திலேயே தொடர்ந்து வழி நடப்பேன், பி.ஏ. முடித்த பின் ஏதாவதொரு தனியார் பள்ளியில் தலைமையாசிரியர் பதவி, அல்லது நல்ல பத்திரிகை யொன்றின் ஆசிரியராவது, பொதுப் பணிகள் ஏதாவதில் ஈடு படுவது...இவைதான் எனது வாழ்வின் குறிக்கோள்கள். பத்திரிகை யும் குடியானவர்களுக்கு, பாட்டாளி மக்களுக்கு, உறுதுணையாக ஆதரவாக இருக்கவேண்டும்; என்று எழுதியுள்ளார்.

போதிய பொருளாதார ஆதாயமின்றி 'ஜமானா'வில் பணிபுரிய இயலாமலிருப்பது குறித்து அவர் எழுதுகிறார்—'இது எனக்கு ஏற்ற துறையில்லை என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். இதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் வேறுவழியில்லை. நான் தியாகத்தை என்னுடன் நிறுத்திக்கொள்ள நினைக்கிறேன். என் குழந்தை களும் இதன் சக்கரங்களில் அறைபட்டுப் போவதை நான் விரும்ப வில்லை, குறைந்தபக்ஷம் வயிற்றுக்குத் தேவையானதை என்னால் சம்பாதிக்க முடியும். ஏதோ கொஞ்சம் இலக்கியப் பணியும் செய்யமுடிகிறது இதுதான் எனது தியாகம். 'கடவுள்—உலகம்,' 'சமுதாயம்—நான்', இவ்விரண்டையும் சமாளித்துக் கொண்டிருக் கிறேன். இலக்கியப் பணி, தியாகத்தில் குறைந்ததென நான் எண்ணவில்லை.'

இச் சமயத்தில்தான் பிரேம்சந்தின் மகனான மன்னே, அம்மை நோய் கண்டு காலமானான். பிரேம்சந்தை இச் சம்பவம் மிகவும் பாதித்துவிட்டது. இருப்பினும் தமது துயரை மறைத்துக் கொண்டு மனைவியைத் தேற்றமுயன்றார். பிரேம்சந்தின் உடல் நிலையும் திருப்திகரமாக இருக்கவில்லை, முன்னிருந்ததைவிட மிகவும் மெலிந்து போய்விட்டார்.

சொந்தமாக ஓர் அச்சகம் வைக்க வேண்டுமென்பது பிரேம் சந்தின் நெடுநாளைய அவா. அவரது தம்பி மகதாப் ராய்க்கு இத் துறையில் சிறிதளவு பரிச்சயம் இருந்தது. மகாவீர் பிரசாத் போத்தாரின் ஸ்தாபனமான இந்தி புஸ்தக ஏஜென்ஸியில் அவர் சிறிது காலம் வேலை பார்த்திருந்தார். கல்கத்தாவிலிருந்த ஓர் அச்சகத்தின், ஐம்பது சதவீத பங்குகளை வாங்கிக் கொள்ள பிரேம் சந்த் தயாராகிவிட்டார். எவ்விதமாகவோ பணமும் திரட்டப் பட்டுவிட்டது. மகதாப்ராய், அச்சகம் தம் பெயரில் வாங்கப்படும் என எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் சிவராணி தேவியோ, அது தம் மூத்த மகன் ஸ்ரீபத் ராயின் பெயரில் வாங்கப்பட வேண்டுமென்பதில் உறுதியாகயிருந்தார்.

இதனால் இவ் விஷயம் அப்படியே நின்றுவிட்டது. சிவராணி தேவி—தம் கணவரைவிட உலகின் நடைமுறையையொட்டிய மனப்போக்குடையவராக இருந்தார் எனத் தெரிகிறது. இதன் பின் பிரேம்சந்த், வாரணாசியிலேயே ஓர் அச்சகத்தை விலைக்கு வாங்குவது, தாமும் அவ்வூரிலேயே தங்கிவிடுவது என்பது பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்.

நாட்டிலே காந்தியடிகளின் சத்தியாகிரக இயக்கம், காட்டுத் தீயெனப் பரவிக்கொண்டிருந்தது. இந்த இயக்கம், பிரேம் சந்தைத் தன்பால் பெரிதும் ஈர்த்தது. மின்னல் வேகத்தில் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருந்த காந்தி யடிகள் 1921 பிப்ரவரி 8 தேதி கோரக்பூர் வழியாகச் சென்றார். நகரத்தில் ஓர் மாபெரும் பொதுக்கூட்டத்தில் அவர் பேசினார். பிப்ரவரி 15 தேதி பிரேம்சந்த் தமது வேலையை ராஜினாமா செய்து விட்டார். அவர் இந்த முடிவிற்குவர, சிவராணி தேவி மிகவும் ஒத்துழைத்தார்.

'வேலையை விட்டுவிடுங்கள். அரசாங்கத்தின் போக்கு சகிக்க முடியாமல் இருக்கிறது' என்றார் சிவராணி தேவி.

வழக்கம்போல் மனம்விட்டு உரக்க நகைத்த பிரேம்சந்த்—'முடிவிற்கு வரும்முன் நன்றாகச் சிந்தனை செய்' என்றார்.

'இது, நல்லதென்ற முடிவிற்கு நான் வந்துள்ளேன். இப் பொழுது நீங்கள் நிம்மதியாக, சந்தோஷமாக இருக்கிறீர்கள். அதுவே எனக்குப் போதும், காடு, மேடுகளிலிருந்தால்கூட நான் சந்தோஷமாக இருப்பேன், இனி அதிர்ஷ்டம் நம் பக்கம் இருக்கு மென நான் நம்புகிறேன்' என்று பதிலளித்தார் சிவராணி தேவி.

பிப்ரவரி 16 தேதி பிரேம்சந்த் அரசாங்கப் பணியின் பொறுப்பு களிலிருந்து விடுதலை பெற்றார். அன்றே, தாமிருந்து வந்த அரசாங்க விடுதியைக் காலி செய்துவிட்டு நண்பரொருவரின் இல்லத்திற்குச் சென்றுவிட்டார். ஓர் அச்சகம், பத்திரிகை, இப்படி அவர் மனதில் ஏதேதோ எண்ணற்ற திட்டங்கள்

உருவாகிக் கொண்டிருந்தன. ஆனால் இவற்றிற்கெல்லாம் பணம் தேவைப்பட்டது. சிறியதொரு நூற்பாலை துவங்கினார். ஆனால் இதுவும் போதிய அளவு திருப்திகரமாக இருக்கவில்லை. 1921 மார்ச்சு 18 ஆம் தேதி பிரேம்சந்த் கோரக்பூரை விட்டு வாரணாசிக்குப் புறப்பட்டார்.

முதலில் லாமாகியில் சிறிதுகாலம் தங்கினார்; எழுதினார்; காந்தீயக் கருத்துக்களைப் பரப்பினார். ஆயினும் அவர் மனம் நிம்மதியற்றிருந்தது. வீட்டில் மனைவிக்கும் மாற்றாந் தாய்க்கும் நடந்துகொண்டிருந்த பூசல்கள் அவரது நிம்மதியைக் குலைத்தன. ஜூனில் அவர் கான்பூருக்குப் புறப்பட்டுச் சென்றார். இங்கு ஓர் மார்வாரிப் பள்ளியில் தலைமையாசிரியராக நியமனம் செய்யப் பட்டார். இங்கு நாட்டின் அரசியல் சூறுவளியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்ட பிரேம்சந்த் சந்தோஷமாகத்தான் இருந்திருக்கவேண்டும். ஆனால் அவரது வேலையில் இடைவிடாது குறுக்கிட்ட பள்ளி நிர்வாகியுடன் ஒத்துப்போவது அவருக்குச் சிரமமாக இருந்தது, முடிவில் 1922 பிப்ரவரி 22ஆம் தேதி தமது வேலையை ராஜினாமா செய்துவிட்டு அவர் வாரணாசி திரும்பினார்.

வாரணாசியில் ஞான மண்டலில் பணிபுரிந்த அவர் 'மரியாதா' வெளிவர உதவி புரிந்தார். 'ஆஜ்' பத்திரிகையில் எழுதினார். பின்னர் காசிவித்தியா பீடத்தினர் நடத்திய பள்ளியின் பொறுப்பை ஏற்றார். லாமாகியில் இருந்த வீட்டை, தமது எழுத்து வேலைக்கு வசதியாக இருக்கும்படி, மீண்டும் புதுப்பித்தார். வாரணாசியில் சொந்த அச்சகம் ஒன்றை நிறுவ திட்டமிடலானார். அச்சகத்திற்கு 'சரஸ்வதி பிரஸ்' என்ற பெயர் சூட்டப்பட்டது. அவருக்கு 'பிரேம்சந்த்' என்ற புனை பெயரை அளித்த நண்பர் நிகம்தான் அச்சகத்திற்கு இப்பெயரையும் கூறியிருந்தார். கடைசி நிமிடம் வரை, இவ்வச்சகம் பிரேம்சந்திற்குத் தீராத தலைவேதனையாக இருந்து வந்தது. அவர் தாம் ஈட்டிய பொருளின் பெரும் பகுதியை, விலைமதிப்பற்ற தமது அருமையான உழைப்பை, இதில் செலவிட்டும் நிம்மதியைக் காண இயலவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் எழுதினார்—'இந்த அச்சகம்தான் எல்லா விதத் துன்பங்களுக்கும் மூலகாரணம். எந்த அவவேளையில் இதற்கு அஸ்திவாரம் போடப்பட்டதோ கடவுளுக்குத்தான் தெரியும்! பத்தாயிரம் ரூபாய், பதினொரு வருட உழைப்பு, இதய வேதனை, யாவுமே வீணாகிவிட்டது. இந்த அச்சகத்தின் காரணமாய் எண்ணற்ற நண்பர்களின் அதிருப்தியை நான் சம்பாதித்துக் கொண்டேன். பலருக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற முடியாமல் தவறி இருக்கிறேன். படிப்பதற்கும், எழுதுவதற்கும், பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டிய எனது

அருமையான நேரத்தை, புரூப் திருத்துவதில் வீணுக்கியிருக்கிறேன். என் வாழ்வில் இதுதான் மிகப்பெரிய,.மாபெரும் தவறு.'

## 8

பிரேம்சந்த் எழுதுவதில் முழுமூச்சுடன் இறங்கினர். 'சங்கிராம்', 'கர்பலா' ஆகிய இரு நாடகங்களையும், ஏராளமான சிறு கதைகளையும் எழுதினர். மற்றும் தமது துணிகரமான முயற்சியான 'கர்மபூமி' என்னும் நாவலை எழுதுவதில் ஆர்வத்துடன் ஈடுபட்டார். 'சங்கிராம்' தேசீயப் போராட்டத்தை நிலைக்களனுய்க் கொண்டது, 'கர்பலா' நாட்டைப் பிளவுபடுத்தும் வகுப்புக் கலவரங்களின் கொடுமையைப் பகைப்புலனுகக் கொண்டிருந்தது. வகுப்பு ஒற்றுமை ஏற்பட வேண்டுமென விழைந்த பிரேம்சந்த் தமது எழுத்துக்கள் மூலம் இக் கருத்தை வலியுறுத்தினர்; தம்மாலியன்றமட்டும் பாடுபட்டார். வகுப்புவாதம் என்பது ஓர் பயங்கரமான தொற்றுநோய்; வெகு விரைவிலேயே பரவி, அது படுநாசத்தை விளைத்துவிடுகிறது.

நிகமிற்கு எழுதியுள்ள கடிதங்களில் பிரேம்சந்த் அரசியல் பற்றி தமது கருத்துகளைத் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார். 1923 ஆம் ஆண்டு பிப்ரவரி 17 ஆம் தேதி எழுதியுள்ள கடிதத்தில் அவர் குறிப்பிடுகிருர் 'நான் எந்தக் கட்சியைச் சேர்ந்தவன் எனக் கேட்டிருக்கிறீர்கள். நான் எக் கட்சியிலும் சேர்ந்தவனல்ல. ஏனென்ருல் இவ்விரண்டு கட்சிகளுமே நடைமுறையில் எதையும் சாதிக்க, செயலில் இறங்கவில்லை. ஆனுல், நான், சாதாரணக் குடிமகனுக்கும் அரசியல் அறிவைப் புகட்டுவதைத் தனது வேலைத் திட்டங்களில் ஒன்ருக ஏற்றுக்கொண்டு எதிர்காலத்தில் இயங்கப் போகும் ஒரு கட்சியைச் சார்ந்தவன்' என்று எழுதியுள்ளார்.

இதற்கு முன் நிகமிற்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில்—'நான் போல்ஷ்விக் கொள்கைகளைக் கிட்டத்தட்ட ஏற்றுக் கொண்டு விட்டேன்' எனக் குறிப்பிட்டுள்ளார். நாட்டின் விடுதலையை நாடிநின்ற பிரேம்சந்த் நாட்டின் இருபெரும் சமுதாயங்களிடையே ஒற்றுமையை, ஒருமைப்பாட்டு உணர்வைக் காண விழைந்தார். ஏழ்மையில் உழலும், மக்களின் பொருளாதார நிலை உயர்ந்து, தங்கள் துன்பங்கள் வேதனைகளிலிருந்து அவர்கள் விடுபட வேண்டுமென அவர் ஆசைப்பட்டார்.

1922 அக்டோபர் முதல் தேதி மாபெரும் நாவலான 'ரங்க பூமி'யை அவர் எழுதத் துவங்கினர். 1924 ஏப்ரல் முதல் தேதி இதை உருதுவில் எழுதும் பணி முடிந்துவிட்டது. சேவாசதன்,

பிரேமாசிரமம் போலவே இந் நாவலின் இந்திப் பதிப்புதான் முதலில் வெளியாகியது. உருதுவில் அவரது படைப்புகள் மிக மெதுவாக வெளிவரலாயின. இந்தியின்பால் அவரது கவனம் இப்பொழுது திரும்பத் தொடங்கி இருந்தது.

லட்சுமணபுரியைச் சேர்ந்த கங்கா புத்தகமாலா வெளியீட்டார், ரங்கபூமியை வெளியிட்டனர். பிரசுரகர்த்தர்களிடமிருந்து பிரேம்சந்த் 1000 ரூபாய் பெற்றுக்கொண்டார். அச்சமயம் அச்சகத்தில் ஏற்பட்டிருந்த நெருக்கடியான நிலையைத் தவிர்க்க இத் தொகை பெரிதும் உதவியது. அச்சகத்திலிருந்து அவர் ஊட்டம் பெறுவதற்கு மாறுக அதற்கு அவர் அவ்வப்போது இரைபோட்டுக் கொண்டிருக்க நேரிட்டது. கங்கா புத்தகமாலா வெளியீட்டின் நிர்வாகியான துலாரே லால் பார்க்கவா, இலக்கிய ஆலோசகரொருவரைத் தேடிக் கொண்டிருந்தார். நூறு ரூபாய் மாதச் சம்பளத்தில், பிரேம்சந்த் இவ்வேலையை ஏற்றுர்.

ரங்கபூமியின் கதாநாயகனுகிய சூர்தாஸ் இந்திய நாவல்களின் வரலாற்றிலே இடம் பெறத்தக்க ஓர் இணையற்ற உன்னதமான பாத்திர படைப்பு. சூர்தாஸ் ஓர் அந்தகன்; வண்டிகள், கார்களுக்குப் பின்னுல் ஒரு தம்பிடிக்காக இறைஞ்சியோடுபவன். யாசிப்பதையே தொழிலாகக் கொண்ட இவனே, அதீதமான சுயாபிமானமும், பரந்த உள்ளமும், இரக்க உணர்வும் கொண்டவனுய் பொது உரிமைகளுக்காகப் போராடும் இயல்புடையவனுக ஆசிரியர் சித்திரித்திருக்கிறுர், வழிவழியாக வந்துகொண்டிருக்கும் இந்திய யாசகத் தொழிலுடன் அவன், காந்தியடிகளின் ஒரு சில தன்மைகளேத் தன்னகத்தே கொண்டுள்ளான். லாமாகியிலிருந்த சமயம் ஓர் அந்தகப் பிச்சைக்காரனே ஆசிரியர் கண்டிருக்கிறுர். தெருவில் செல்லும் பாதசாரிகள், வண்டிகளேத் தொடர்ந்து அவன் யாசிப்பதுண்டு. கோரக்பூரிலிருந்த சமயத்தில் பார்வை இழந்த பாடகச் சிறுவன் ஒருவனே அவர் அறிவார். அரசாங்க ஊழியத்தைத் துறத்தபின் மாலே வேளேகளில் அச் சிறுவனேப் பாடச் சொல்லிக் கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம். பார்வையையிழந்த இந்த யாசகனே மனதில் கருவாகக் கொண்டு பிரேம்சந்த் தமது செறிந்த கற்பனே வளத்திஞல் உருவாக்கியுள்ள இவ்வற்புதமான பாத்திரம் புதிய இந்தியாவின் வரலாற்றிலே அழியா இடம் பெற்றுள்ள காந்தியடிகளே நினேவூட்டும்படியாக அமைந்துள்ளது.

ரங்கபூமி ஆழ்ந்த வண்ணங்கள் மிளிரும், பல்வேறு வண்ணக் கலவைகளின் இழைகளால் நெய்யப்பட்டிருக்கிறது. இதில் மையமாக ஊடுருவிச் செல்லும் இழை, வறுமையும் துன்பமும் நிறைந்த கிராமியச் சமுதாயத்தைப் பற்றியதாகும். கிராமத்தின் மேய்ச்சல் நிலத்தில், ஜான் சேவக என்னும் கிருத்துவர், சிகரெட் தொழிற்சாலேயொன்றை ஏற்படுத்த விரும்புகிறுர். இந் நாவலில்

பல்வேறு வகையான பாத்திரங்கள் வருகின்றனர். முரண்பாடுகள் மலிந்த பணக்காரர்கள், அவர்களது பேராசை, அவர்களது மகத்தான கனவுகள், புகழாசைகளைக் காட்டுகிறார். சமஸ்தானங்கள், அதன் அதிபதிகளான இளவரசர்கள், அங்குள்ள அடக்குமுறை இதைத்தவிர பல்வேறு சம்பவங்கள் சித்திரிக்கப் படுகின்றன. சம்பவங்கள் நிகழ்வது மிக துரிதமாக, நாடக பாணியில் செல்கிறது. கம்பீரமாக மெல்ல மெல்ல அசைந்து, இரு கரைகளையும் தொட்டுக் கொண்டோடிவரும் அமைதியான ஆற்றொழுக்கல்ல இது; அடித்துப் புரட்டிக் கொண்டு, மலை முகட்டிலிருந்து பெருகிவரும் காட்டாறு போன்றது.

உறுதியான கட்டுக்கோப்பற்ற இந் நாவல், அவர் சிறுவயதில் படித்திருந்த சாகச இலக்கியங்களின் பாதிப்பையும், அதன் விளைவாக எழுந்துள்ள மனவோட்டங்களையும், தாங்கிநிற்கிறது. ஜான் சேவக், சூர்தாஸிற்குச் சொந்தமான ஒரு துண்டு நிலத்தை மிகக் குறைந்த விலைக்கு வாங்குகிறார். பாண்டேபுரில் தொழிற் சாலை அமைக்கப்படுகிறது. தொழிற்சாலை ஏற்பட்டவுடன் அதைத் தொடர்ந்து, அதன் பலனாக விளையும் தீமைகள் பலவும் கிராமத்திற்கு வருகின்றன. சூதாட்டம், குடி, கட்சிப்பூசல், ஆபாசம், போக்கிரிகள் எனப் பலவும் தலையெடுக்கின்றன. கிராமத்துப் பெண்கள் வெளியார்களால் பலவந்தப்படுத்தப்படுகின்றனர். தொழிற்சாலையில் வேலை செய்பவர்களுக்கு இடம் தரவேண்டி, கிராமவாசிகள் தங்கள், தங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றப் படுகின்றனர். நகரத்திற்குச் செல்லும் சூர்தாஸ், சமுதாயத்தின் ஆன்மாவைத் தட்டியெழுப்புகிறான். தனக்கும், கிராமத்திற்கும் இழைக்கப்பட்டுள்ள அநீதியை எடுத்துக் கூறுகிறான். அவனது அறைகூவல் கொடுமையாளர்களை, அடக்கு முறையாளர்களை, எதிர்த்து நிற்கும் உணர்வைத் தூண்டுகிறது. முடிவில் தன் குடிசையில் மூண்ட தீயில் சூர்தாஸ் உயிர்துறக்கிறான்.

சோபி, வினயனின் காதல் இந் நாவலில் இனியதொரு ஊற்றாகச் சுரக்கிறது. தீமைகளையும், அநீதிகளையும் எதிர்த்துப் போராடிய வண்ணம் அவள், அவனை நெடுந்தூரம் தொடர்ந்து செல்லுகிறாள். அவர்களது காதல் எத்தனையோ சோதனைகளுக் குள்ளாகிறது. இருப்பினும் முடிவில் அது வெற்றிபெறுகிறது.

பிரேம்சந்த் பின்னேக்கிச் சென்று, நாகரிகவாடை படாத பழங்காலச் சமுதாயங்களை, ஓர் உயர்ந்த ஆதர்சமாக இதில் காண்கின்றார். தொழிலதிபர்கள், நிலவுடமையாளர்கள், இருவருடைய நியாயமற்ற செய்கைகளை அவர் கண்டிக்கின்றார். இரண்டையுமே அவர் ஆதரிக்கவில்லை. சோஷலிசத்தில், அதாவது சமுதாயச் செல்வத்திற்கு மக்கள் உரிமையாளர்களாக மாறும் நிலையில், தொழில்மயமாவதினால் ஏற்படும் தீமைகளைக்

களைந்தெறிய முடியுமென்றோ, யந்திரங்களை இயக்குந் திறன் பெற்ற மனிதனால் மனித குலத்தின் வேதனைகளைக் களைந்தெறிய முடியுமென்றோ அவர் உணரவில்லை.

சமுதாய அநீதியை எதிர்த்து எழுப்பப்படும் அறைகூவல்தான் இந் நாவலின் பலம். தனிப்பட்ட கிளர்ச்சியாளனான சூர்தாஸ், அன்றைய கொடுமைகள், அநீதிகள், தவறுகளுக்கு எதிராக, மக்களின் ஆன்மாவைத் தட்டியெழுப்புகிறான். அடக்கியொடுக்கிய கொடுமையாளர்கள், மக்களின் எழுச்சிக்கு முன் நடுநடுங்கிப் போகிறார்கள். இதைப்போலவே, சோபியும் விஜயனும் நாட்டில் இதுவரை அடங்கிக்கிடந்த பகுதியான ராஜஸ்தானுக்குச் சென்று, அங்கு அடக்கியொடுக்கப்பட்டிருந்த மக்களிடையே புதியதோர் விழிப்பை ஏற்படுத்துகின்றனர். இந்தியாவின் விரிவான ஜீவனுள்ள சித்திரத்தை இந் நாவலில், ஆசிரியர் தீட்டியுள்ளார். கதை அம்சத்தின் விரிவான களத்தில் வாழ்வின், சமூகத்தின் பல்வேறு பகுதிகள், பலதரப்பட்ட மனிதர்கள் நடமாடுகின்றனர். நினைவில் அழியாமல் நிற்கக்கூடிய பல பாத்திரங்கள் இதில் வருகின்றனர். நாடெங்கிலிருந்தும் இந் நாவலுக்குப் பாராட்டுதல்கள் வந்து குவிந்தன. வாசகர்கள் பிரேம்சந்திற்கு 'நாவல் மன்னன்' (உபன்யாஸ் சாம்ராட்) என்ற பட்டத்தை மனமுவந்து அளித்தனர்.

நீண்ட உபதேசங்கள், ஒழுக்கம் பற்றிய உரைகள் இந் நாவலில் இடம்பெற்றுள்ளன. ஜான் சேவக், அவரது மனைவி, ஈசவர் சேவக்—ஆகியவர்களைக் கொண்ட கிருத்துவச் சமூகத்தைப் பற்றிய சித்திரம் முரண்பாடானது. துணிகரமாகச் செயலாற்றிய வினயனும், சோபியும் ஓடும் ரெயிலில் எதிர்பாராது சந்திக்கின்றனர். தற்செயலாக நிகழ்ந்ததாக இச் சம்பவம் காட்டப்பட்டாலும், இயற்கையாக அமையவில்லை. கிளார்க் சுற்றித் திரிந்த இடங்களுக்கெல்லாம் சோபியாவால் எவ்வாறு உடன்செல்ல முடிந்தது என்பது தெளிவாகவே இல்லை. இப்படி ஓரிரண்டு குறைகளைத் தவிர 'ரங்கபூமி' இந்தி இலக்கியத்தில் ஒரு சகாப்தத்தின் மகத்தான படைப்பாகும். கிராமவாழ்க்கை, நகர வாழ்க்கை, இரண்டையும் ஜீவன் ததும்ப பிரதிபலிக்கும் இந் நாவல் தன் விரிவான கதைக்களத்தில் ஆசிரியரின் செறிந்த கற்பனையின் உயிர் துடிப்பைக் கொண்டுள்ளது. லக்னோவில் வாழ்ந்திருந்த காலத்தில் பிரேம்சந்த் 'ஏழேகால் சேர் கோதுமை' 'சவா சேர் கேஹூ' 'சதுரங்க ஆட்டக்காரரர்கள்' (சத்ரஞ் கே கிலாடி) போன்ற பல அருமையான கதைகளை எழுதினார். லாமாகியில் இருந்தபொழுது எழுதத் துவங்கியிருந்த நாவலான. 'காய கல்பம்' இங்குதான் எழுதி முடிக்கப்பட்டது. 1924 ஏப்ரல் 10 தேதி பிரேம்சந்த் இதை எழுதவாரம்பித்தார். முதல் பகுதி,

ஆறு, ஏழு மாதங்களுக்குள் முடிந்துவிட்டது. 1924 நவம்பர் 12 தேதி, இதன் இரண்டாம் பகுதியை எழுதத் துவங்கினர். 1926இல் ஆசிரியரின் சொந்த அச்சகத்திலிருந்து இது வெளியாகியது.

'காய கல்பம்' மறுஉலகத்தைப் பற்றிய விஷயங்களைக் கொண்டதாக இருக்கிறது. ரைடர் ஹேகார்ட்டின் 'ஷி' (அவள்) என்ற நாவலில் வருவது போல இதன் கதாபாத்திரங்களான ராஜகுமார், ராணி தேவப்பிரியா இருவரும் இப் பிறவியிலும் ஒன்று சேருகின்றனர். ராஜ்குமார் மலைப்பிராந்தியங்களில் வாழ்கின்ருன்; யோகம் பயில்கின்ருன். அவனது இச்சைப்படி, வானத்தில் ஏறவும் இறங்கவும் கூடிய விமானங்களைக் கண்டுபிடிக்கிருன். இதுபோன்ற கற்பனைகள், மிக்கத் தீவிரத்துடன் பிரேம்சந்த் எழுதிக்கொண்டிருந்த சமூக நாவல்களைத் தகர்த்துவிட்டிருக்கக் கூடும். ஆனுல் இத்தகைய போக்குகள் அவரது எழுத்தில் அதிகம் காணப்படவில்லை. இரண்டொரு இடங்களில் துணுக்கு களாகத்தான் காயகல்பத்தில் இடம் பெற்றுள்ளன. மனித இயல்பு, சமூகப் போக்கு பற்றித் தீவிரமாகச் சிந்திக்க முற்படுபவர் களின் கவனத்தைக் கவர இதில் போதிய விஷயமுள்ளது. ஆக்ராவில் வகுப்புக் கலவரம் திடீரென மூண்டுவிடுகிறது. காந்தீய முறைகளைக் கையாண்டு சக்ரதர் மீண்டும் அமைதியை நிலைநாட்டுகின்ருன். கிராமப்பகுதிகளில் நிலவுடமையாளர்களின் அடக்குமுறை அளவு கடந்துவிடுகிறது. ஒடுக்கப்பட்ட மக்கள் பீறிட்டெழுந்து புரட்சிக்கொடி உயர்த்துகின்றனர். இப்படி பல்வேறு சம்பவங்கள் பின்னிப் பிணைந்திருக்கும் மனித வாழ்வின் சுவாரஸ்யமான கதை, முன்ஷி வஜரதர், அவரது குடும்பத் தினரைச் சுற்றிப் படர்ந்துநிற்கிறது. தந்தை பிரபுக்களின் தர்பாரி லிருந்தவர். முகஸ்துதி செய்து, குற்றேவல் புரிந்து, தம் வாழ்வை உயர்த்திக்கொண்டவர். மகன் பொதுமக்களின் கவனத்தைக் கவரும் கிளர்ச்சிக்காரனுக வளர்ந்து, பின்னர் வாழ்க்கையைத் துறந்துவிடுகிருன். அவன் ஒரு அனுதைப் பெண்ணை மணக் கின்ருன். பின்னுல் அவள் ஓர் செல்வந்தர்வீட்டுப் பெண் எனத் தெரிகின்றது. சக்ரதரின் மகன் சங்கதர் தன் தந்தையின் வார்ப்பாக உருவாக்கப்படுகிருன்.

நாவலில் நமது சிந்தனையை கிளறிவிடுவது, நம்மைத் தீவிர மாகச் சிந்திக்கத் தூண்டிவிடுவது—'இந்த உலகில் எது நியாயம்?' —என்ற பிரச்சனைதான். 'சுயநலமும், பொருமையும், அநீதியும் நிறைந்த இந்க உலகத்தை கடவுள் ஏன் படைத்தார்? எல்லா மனிதர்களும், மனித குலம் முழுமையும், சமூகமும், அமைதியாக, ஆனந்தமாக வாழக் கூடியதொரு உலகத்தைப் படைப்பது சாத்தியமில்லையா? ஒருவன் சுகபோகத்தில் புரள்வதும், மற்ருெருவன் அதிலிருந்து வஞ்சிக்கப்பட்டு விரட்டப்படுவதும் ஓர்

நாடு மற்ருென்றைச் சுரண்டி, அதன் ரத்தத்தை உறிஞ்சித் தனது ஆதிக்கத்தை அதன் மீது நிலைநாட்டுவதும், மற்ருென்று அடங்கி, ஒடுங்கி, நசுக்கப்பட்டு, பட்டினி கிடப்பதும் என்ன நியாயம்? இத்தகைய அநீதிகள் நிரம்பிய உலகம் கடவுளால் படைக்கப்பட்டதாக இருக்க முடியாது!...' இப்படிப்பட்ட, பல அரிய கருத்துகளை இந் நாவலில் பல இடங்களில் காணலாம்.

இச் சமயத்தில் தான் தம்மிடம் வேலைபார்க்க வரும்படி ஆள்வார் மகாராஜாவிடமிருந்து அழைப்பு வந்தது. மாதம் 400 ரூபாய் சம்பளம். கார், பங்களா, எல்லாமிருந்தும் பிரேம்சந்த் இந்த அழைப்பை மறுத்துவிட்டார்.

நாளுக்கு நாள் வளர்ந்துவரும் பிரேம்சந்தின் புகழும், பெருமையும், சிலருக்கு எரிச்சலையும், தலைவலியையும் தந்தது. அவர்களில் ஒருவரான ஸ்ரீ அபத் உபாத்தியாயா என்பவர், பிரேம்சந்த் இலக்கிய மாரீசம் செய்வதாகக் குற்றம்சாட்டி, சுமார் 6 மாதகாலம் இதைப்பற்றி எழுதினர். அவர் இதற்காக விரிவான முறையில் ஆராய்ச்சி நடத்தி, என்னென்ன நூல்களிலிருந்து, எந்தெந்த பாத்திரங்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன என்பதற்கு அகரவரிசைப் பட்டியலே தயாரித்துவிட்டார். மற்ருெருவர்: பிரேம்சந்த் வெறுப்பையும் துவேஷத்தையும் பிரசாரம் செய்பவர் என விமர்சித்தார்.

'பேனு, தியாகம், வாள்' (கலம், தியாக் அவுர் தல்வார்) என்ற தலைப்பில் கட்டுரைத் தொகுதியொன்றை பிரேம்சந்த், சரஸ்வதி அச்சகத்தின் மூலம் வெளியிட்டார். தங்களது ஒப்பற்ற தியாகம், வீரம், பேனு வன்மையினுல் அழியாப் புகழ்பெற்ற மாந்தர்களைப் பற்றிச் சுருக்கமான வாழ்க்கை வரலாறுகள் இதில் இடம்பெற்றிருந்தன. ராணு பிரதாப், கரிபால்டி, கோகலே, அக்பர், விவேகானந்தர், ராஜா மான்சிங், ராஜா தோடர்மல் போன்ற பலரும் இவ்வரிசையில் இடம் பெற்றனர்.

பெண்களின் நலத்திற்காக நடத்தப்பட்ட 'சாந்த்' பத்திரிகையின் விசேஷ சிறுகதை மலரொன்றை பிரேம்சந்த் தயாரித்தார். 'சாந்த்' பிரசுரகர்த்தர்கள் 'பிரேம பிரபோத்' என்ற தலைப்பில் அவரது சிறுகதைத் தொகுதியொன்றை வெளியிட்டனர். சரஸ்வதி அச்சகம் நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருந்ததால் பிரேம் சந்த் மீண்டும் வேலை தேடவாரம்பித்தார். மாதுரி பத்திரிகையின் ஆசிரியராக மாதம் 200 ரூபாய் சம்பளத்தில் லக்னே சென்ருர்.

பிரேம்சந்தின் புதிய நாவலான 'நிர்மலா' 1925 நவம்பரி லிருந்து 1926 நவம்பர் வரை 'சாந்த்' பத்திரிகையில் தொடர்ச்சி யாக வெளிவந்தது. அவரது மற்ற நாவல்களுடன் ஒத்திட்டுப் பார்க்கும்போது இது மிகச் சிறிய நாவல், இந்தியப் பெண் குலத்தின் வாழ்க்கையை விஷமாக்கிவரும், வரதட்சணைப் பழக்கம்

தான் இக் கதையின் கருப்பொருள். நிர்மலாவின் தந்தை இறப்ப தால் அவள் தாரமிழந்த நடுத்தர வயதுடைய ஒருவனை மணக்க நேரிடுகிறது. தந்தை உயிருடன் இருந்தபொழுது அவளுக்கென நிச்சயிக்கப்பட்டிருந்த இளைஞன் பெருந் தொகை வரதட்சனை எதிர்பார்த்ததால் வேறு இடத்தில் விவாகம் செய்துகொள்கிருன். சமூகத்தில் நிலவிவரும் இக் கொடிய பழக்கத்தின் தீமைகளை அப்பட்டமாகக் காட்டுவதுதான் இந் நாவலின் நோக்கம். பெரும் பாலும் பெண்கள் சந்தாதாரர்களாக இருந்த 'சாந்த்' பத்திரி கையின் வாசகர்களிடையே இந் நாவல் மிகவும் பிரபலமடைந்தது. இந் நாவல் முடிந்ததும் பிரேம்சந்த் 'சாந்த்' பத்திரிகையில் தொடர்ந்து இன்னொரு குறுநாவலை எழுதினர். இதன் பெயர் 'பிரதிக்ஞை'. இது முன்னரே எழுதிவைத்திருந்த 'பிரேமா' என்னும் நாவலின் திருத்தி அமைக்கப்பட்ட பதிப்பாகும். 1927 ஜனவரியிலிருந்து நவம்பர் வரை இது தொடராக வெளியாயிற்று.

1928 ஜனவரியில் பிரேம்சந்த் மாதுரியில் ஓர் சிறுகதை எழுதினர். இது ஓர் ஹாஸ்யச் சித்திரம். இதன் தலைப்பு 'மோடே ராம் சாஸ்திரி.' (குண்டு ராம் சாஸ்திரி). லக்னோவிலிருந்த பிரசித்திபெற்ற நாட்டு வைத்தியரொருவர் இது தம்மைப் பரிகசித்து எழுதப்பட்டதாக எண்ணினர். மாதுரியின் ஆசிரியர், பதிப் பாளர், வெளியீட்டார் மூவரின் மீதும் மான நஷ்ட வழக்குத் தொடுத்தார். இந்த கேலிச் சித்திரம் எந்தத் தனிமனிதரையும் குறிப்பிட்டு எழுதப்படவில்லை. வைதீகப்பற்று மிகுந்த பிற்போக் காளர்களான 'வைத்தியா'களைப் பற்றிப் பொதுப்படையாக எழுதப்பட்டுள்ளது என்பதை ஆசிரியர் எடுத்துக் கூறினர். 'மாதுரி', 'நவால் கிஷோர் பிரஸ்' இரண்டிலிருந்தும் அச்சமயம் வேலைநீக்கம் செய்யப்பட்டிருந்த சிலர், இதைப் பெரும் போராக மாற்றிவிட விரும்பியும், இவ்வழக்கு விரைவில் முடிந்துவிட்டது.

பிரேம்சந்தின் மகனை அமிருத ராய் தன் தந்தையைப் பற்றிய 'பேனு வீரன்' (கலம் கா சிபாஹி) என்ற வரலாற்று நூலுக்காகக் குறிப்புகளைத் திரட்டும்போது, அதிர்ஷ்டவசமாக நாட்குறிப்பு (டைரி) ஒன்று கிடைத்தது. இதிலுள்ள சில குறிப்பு களிலிருந்து, லட்சுமணபுரியில் பிரேம்சந்தின் அன்ருட வேலை களைப் பற்றிக் கொஞ்சம் தெரியவருகிறது:—

பிப்ரவரி 11ஆம் தேதி: வீட்டுக் கணிதம் என்ற நூலின் கையெழுத்துப் பிரதியைப் படித்து அதைப் பற்றிய என் கருத் துக்களை எழுதினேன். 'மான்யூல் கிராமர்'க்கு விளம்பரம் ஒன்று எழுதினேன்.

மாதுரியின், வரும் இதழ்களுக்கானத் திட்டம் தயாரித்தேன்.

'சரே கோஹசாரி'லிருந்து இரண்டு பக்கம் மொழி பெயர்த்தேன்.

பிப்ரவரி 12ஆம் தேதி: ஞாயிற்றுக்கிழமை.

பிப்ரவரி 13ஆம் தேதி: சுமார் மூன்று பக்கம் மொழிபெயர்த்தேன். 'பீஜக்'கிற்காக விசார்தாஸிற்கு ஒரு கடிதம் எழுதினேன், புத்தக இலாக்காவிற்காக சில விளம்பரங்களை அழகுபடுத்திக் கொடுத்தேன். 'மலரிலே முள்'ளில் சில பக்கங்களைத் திருப்பிப் படித்துப் பார்த்தேன். 'பாரத் கதா கௌமுதி'க்காக சில பிளாக்குகளை இலாக்காவிற்கு அனுப்பினேன்.

'சரே கோஹ்சாரி'லிருந்து இரண்டு பக்கங்கள் மொழி பெயர்த்தேன்.

மேற்கண்ட குறிப்புகளிலிருந்து மாதுரியை வெளியிடும் பொறுப்பைத் தவிர நவல் கிஷோர் அச்சகத்தின் இதர வேலைகளையும், நிறைய கவனித்துவந்தார், என்பது தெரிகிறது. இச்சமயத்தில் பிரேம்சந்துடன் வேலை பார்த்துவந்த மிர்ஜா முகமது அஸ்காரி அவரைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:—

'இங்கிருந்த இரண்டு, மூன்று ஆண்டுகளிலும், பிரேம்சந்த் மிக உற்சாகமாக இருந்தார். முகம் எப்பொழுதும் பிரகாசமாக இருக்கும். கோபம் வந்து நான் பார்த்ததே இல்லை சில சமயம் வேடிக்கையாக 'உங்களுக்குக் கோபமே வராதா? வீட்டில் கூட பொறுமை இழக்க மாட்டீர்களா?' என்று நான் கேட்பதுண்டு, நான் இப்படிக் கேட்டதும் அவர் சிரித்துவிடுவார். மாதுரியின் அலுவலக அறை மேல்மாடியில் இருந்தது. ஆனால் முன்ஷீஜீயும், மாதுரி அலுவலகத்தைச் சேர்ந்த சிலரும் எனக்கு அடுத்த அறையில் தான் உட்கார்ந்து பேசுவார்கள்; விவாதிப்பார்கள். அவருடைய நண்பர்கள், உடனிருந்தவர்கள் யாவரும் அவரது நல்ல தன்மை, ஜீவன் ததும்பும் ஹாஸ்ய உணர்வு, வேடிக்கையான சுபாவம் இவற்றைப் பெரிதும் விரும்பினர். அவர் உரக்கச் சிரிப்பார், சிரிப்பினால் அறையே எதிரொலித்துப் பிரகாசமடையும். 'நவதீர்' என்ற என்னுடைய புத்தகங்களிலிருந்து நான் கதைகளைச் சொல்வது வழக்கம். ஒரு கதையில் நமாஸிற்குக் குரல் கொடுத்து அழைக்கும், முவஜ்ஜின் (பிரார்த்தனைக்கு மக்களை அழைப்பவன்) ஒருவன் உரக்கக் கூவிய பின் அங்கிருந்து ஓடிவிடுவான். இதைக் கண்ணுற்ற ஒருவன் ஏன் இப்படிச் செய்கிறாய் என வினவியதற்கு—'எனது அஜான் (பிரார்த்தனை அழைப்பு) எப்படி ஒலிக்கிறது எனக் கேட்க விரும்புகிறேன். அதற்காகத்தான் ஓடிவந்தேன்' என்கிறான். இக்கதையைக் கேட்ட பிரேம்சந்த் விழுந்து விழுந்து சிரித்தார். சிரித்து சிரித்துக் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது.

# 9

சொந்த வாழ்க்கையில் பிரேம்சந்த் பல்வேறு பிரச்சினைகளை சமாளிக்க வேண்டியிருந்தது. தம் பெண்ணுக்கு வரன் தேடினார். பெண் அதிகம் படிக்கவில்லை. பிரேம்சந்தின் மகள் என்ற விஷயத்தில் மிகுந்த திருப்தி கொண்டிருந்தாலும், மணமகனின் வீட்டைச் சேர்ந்த சில பெரியவர்கள் நாசூக்காக வரதட்சணைப் பிரச்சினையை எழுப்பினர். லாமாகியில் திருமணம் நடைபெற்றது. பிரேம்சந்த் 'கையாடுதல்' (கபன்) என்ற நாவலை எழுதினார். 1931ஆம் ஆண்டு துவக்கத்தில் சரஸ்வதி அச்சகத்தில் இது வெளியாயிற்று. இந் நாவலின் மையக் கருத்து, பிரேம்சந்த் கடுமையாகத் தாக்கிவந்த பெண்களின் நகை ஆசையாகும். ஓர் பெண்ணின் இவ்வாசை, கணவனின் வாழ்வை எவ்விதம் சீர் குலைத்துவிடுகிறது என்பதை அவர் இந் நாவலில் காட்டுகிறார். இதற்கு முன் அவர் எழுதிய நாவல்களில் 'கிருஷ்ணா'வும் இதே கருத்தைக் கருப்பொருளாகக் கொண்டிருந்தது இக் கருத்தை அவரது பல சிறு கதைகளிலும் காணலாம், சேவாசதனத்தின் கதாநாயகியான சுமன்கூட இதே போன்றதொரு பலவீனத்தினால் தான், கண்ணியத்திலிருந்து நழுவி விடுகிறாள்.

நிகமுக்கு எழுதிய ஓர் கடிதத்தில்—'எனது சம்பளம் மற்றும் கிடைக்கும் படிகளிலிருந்து என்னால் எதையும் சேமிக்க இயல வில்லை. நான் என் மனைவிக்கு ஒரு ஜோடி வளையல் செய்திருக் கிறேன். இது அவளது நெடுநாளைய ஆவா. இதைச் சேமிப்பு, வரும்படி என எப்படி விருப்பமோ அப்படி நினைத்துக்கொள். இதனால் ஏற்பட்ட மன உளைச்சலிலிருந்து என்னால் இன்னும் மீள முடியவில்லை...' என பிரேம்சந்த் எழுதியிருக்கிறார். சேவாச தனத்து சுமனின் கணவனும், கபனின் ஜால்பாவின் கணவனும் அநுபவித்ததுபோல் பிரேம்சந்த் தம் வாழ்வின் ஆரம்ப காலத்தில் மிக மிகச் சிறிய அளவில் இத்தகைய சிரமங்களை, மனவேதனையை அனுபவித்திருக்கக்கூடும்.

கபனின் கதாநாயகியான ஜால்பா சந்திரஹாரம் வேண்டு மென ஆசைப்படுகிறாள். குறைந்த சம்பளக்காரனான கணவன், அவளிடம் செல்வந்தன் போல் பாவிப்பதால், அவளை திருப்தி செய்ய, சந்திரஹாரத்திற்காக அலுவலகப் பணத்தைக் கையாட நேர்கிறது. இதன்பின் அவன் தலைமறைவாகக் கல்கத்தாவிற்கு ஓடிவிடுகிறான். அங்கு காய்கறிக் கடை வைத்திருக்கும் ஒரு தம்பதிகள் அவனுக்கு அடைக்கலம் தருகின்றனர். இங்கு அவன்

போலீஸ் விரித்த வலையில் வீழ்ந்துவிடுகிறான். போலீஸ் தாங்கள் பொய்யாக ஜோடித்திருந்த கொலை வழக்கொன்றில் அவனை அப்ரூவராக அமர்த்திவிடுகின்றனர். இதற்கிடையில் மனம் திருந்திய ஜால்பா கணவனைத் தேடிக் கல்கத்தா வருகிறாள். வருந்தத் தக்க நிலையில் இருந்த கணவனை, அவன் சிக்கியிருந்த வலையிலிருந்து மீட்கிறாள். போலீசார் கையாளும் அக்கிரமமான முறைகள், அவர்கள் புரியும் அட்டூழியங்கள், மக்களிடையே எதிர்ப்புணர்ச்சியைத் தூண்டிவிடுகின்றன. மாபெரும் மக்கள் இயக்கத்தின் சக்தியை வாசகன் இந் நாவலில் உணர ஆரம்பிக்கின்றான். மெல்ல எழும் காற்று, வீசி அடித்து, மாபெரும் புயலாய் நாட்டிலே வீசுவதைக் காண்கிறோம். நகைநட்டிற்கும், வெளிப் பகட்டிற்கும் ஆசைப்படும் ஜால்பாவை, பிரேம்சந்தின் பேனா, மக்கள் தலைவியாக உருவாக்கிவிடுகிறது. பிரேம்சந்தின் படைப்பு களில் குறைவும் நிறைவும் நிறைந்த மனித இயல்புகளை உயர்த்தி, ஏற்றம் தருவதை மீண்டும் மீண்டும் பல இடங்களில் காண்கிறோம்.

அது பிரேம்சந்தின் நாவல்களின் பொற்காலமாக இருந்தது. 1931இன் துவக்கத்தில் 'கபன்' வெளியாயிற்று, 1931 ஏப்ரல் 16 தேதி 'கர்ம பூமி' என்னும் நாவலை எழுதத் தொடங்கினார். இது 1932 இல் வெளியாகியது. பிரேம்சந்தின் கடிதங்களிலிருந்து அப்பொழுது அவரது கடைசி நாவலான 'கோதானே' 1932இல் எழுதத் திட்டமிட்டிருந்தார் எனத் தெரிகிறது. 'ஹம்ஸ்' 'ஜாகரன்' இவ்விரண்டினாலும் ஏற்பட்ட தொந்தரவுகளால் ஜூன் 1936 இல் தான் இந் நாவல் வெளிவர முடிந்தது. அவர் நோய் வாய்ப்பட்டிருந்த சமயத்தில் 'மங்கள சூத்திரம்' என்ற நாவலை எழுதிக் கொண்டிருந்தார். அவரது அகால மரணத்தினால் அது அரைகுறையாக நின்றுபோய்விட்டது. கபன், கர்மபூமி, கோதானம்—இம் மூன்றும் எந்த எழுத்தாளனும் பெருமைபடக் கூடிய தலைசிறந்த படைப்புகள்.

புரட்சிகரமான உத்வேகமும், விருவிருப்பும் கர்மபூமியின் சிறப்பாம்சங்கள். இந் நாவலில் நாட்டின் நிலையைச் சித்தரிக்கிறார். வாழ்வின் எல்லாப் பகுதிகளிலும் முன்னேற்றம் காணப்படுகிறது. தடை, கட்டுப்பாடு, எதுவும் இல்லை. நகர்ப்புறம், நாட்டுப் புறம், மலைப்பிரதேசம், பள்ளத்தாக்கு ... எங்கும் மக்களிடையே பெரும் விழிப்பு ஏற்பட்டுள்ளது. எந்த விதமான அடக்குமுறைகளும் இனி அவர்களை அடக்கமுடியாது. இதுதான் கொதித்தெழுந்த இந்தியாவின் நிலை. சைமன் கமிஷன் பகிஷ்கரிக்கப்பட்டுவிட்டது. சட்டசபையில் குண்டுகள் வீசப்பட்டன. பகத்சிங், சந்திரசேகர் ஆஜாத்போன்ற இளஞ் சிங்கங்கள் அரங்கிலே தோன்றிவிட்டனர். லாகூர் காங்கிரஸில் .தம் தலைமையுரையிலே நேரு—'நான் ஒரு குடியரசுவாதி, சமதர்மத்தை நாடுபவன்'—என்று அறிவித்தார்.

அன்றைய பதட்டமான சூழ்நிலையை, தேசாவேசத்தை கர்மபூமி எதிரொலிப்பது மட்டுமன்றி, கார்க்கியின் 'அன்னை'யைப் போல் இந் நாவல் மக்களின் கிளர்ச்சியும், புரட்சியும் எவ்வாறு உரு வெடுக்கின்றன என்பதை உணர்த்தும் வரலாருக விளங்குகிறது.

அமர்காந்த், சமர்காந்த், சக்ஞு, சுகதா, பதானியன், முன்னி இப்படிப் பல அற்புத பாத்திரங்களை இதில் காணலாம். அமர் காந்தும், சமர்காந்தும்—இரு நேருகளை வாசகர்களுக்கு நினை வூட்டுகிருர்கள். முன்னி, பதானியன், சகீனு, லாலா சமர்காந்த்—போன்ற பாத்திரங்களில் சம்பவ சூழ்நிலையினுல் ஏற்படும் மாற்றத் தைக் காண்பிக்கின்ருர். ரத்தமும், தீயும் சமுதாயத்தைப் புனிதப் படுத்துகின்றன.

அக்காலத்து எழுச்சியைப் பிரதிபலிப்பதுபோல் லாலா சமர்காந்த் வேலை நிறுத்தத்திற்கு அறை கூவி யழைக்கிருர்—'வேலை நிறுத்தம் செய்யுங்கள். ஒரு நாள், இரண்டு நாள் வேலை நிறுத்தம் அல்ல. நகர மன்ற அதிகாரிகள் நம் குரலுக்குச் செவி சாய்க்குமட்டும் இது நீடிக்கும். நாம் ஏழைகள்; புறக்கணிக்கப் பட்டவர்கள்; துன்பத்தில் உழலுபவர்கள், ஆனுல் மேல் மட்டத்தி லிருப்பவர்கள் ஆற அமரச் சிந்தித்துப் பார்ப்பார்களேயாயின் ஏழைகளாகிய நாம்தான் இவர்கள் உயருவதற்கு வழி செய்திருக் கிருேம். நம்மால்தான் இவர்கள் உயர்ந்தனர் என்பதை உணர் வார்கள். உழைத்து, பாடுபட்டு, உயிரைப் பணயம் வைத்து இம் மாடமாளிகைகளைக் கட்டியது யார்? நூற்பாலைகளிலே நெஞ்சுருகப் படுபடுவது யார்? ஒவ்வொரு நாள் பொழுது விடிந்ததும் பாலையும், வெண்ணெயையும் வீட்டு வாசலுக்கே வந்து தருபவர்கள் யார்? இப்மேற்குடி மக்களுக்குப் பாலும் பழமும், வகை வகையான பண்டங்களும், யார் கொணர்ந்து தருகின்றனர்? குப்பையை அகற்றுவது யார்? அழுக்கைத் துவைப்பது யார்? கடிதங்களையும், பத்திரிகைகளையும் யார் கொணர்ந்து தருகின் றனர்? நகரத்தின் ஒரு கால் பகுதி மக்களின் சுகபோகத்திற்காக, மிஞ்சிய முக்கால் பகுதி மக்கள் தங்கள் ரத்தம் சுண்ட உழைத்துப் பாடுபடுகின்றனர்.'

இம் மகத்தான படைப்பு, ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகம்போல் கண்முன்னே விரிகிறது—1. நகர வாழ்வு. 2. மலைப் பகுதி கிராமவாழ்க்கை. 3. கிளர்ச்சி. 4. மலைநாட்டு மக்கள். 5. இயக்கமும் அதன் வெற்றியும்.

காந்தியுகத்தின் ஆழ்ந்த பாதிப்பின் சுவடுகளை இந் நாவலில் நன்கு காண்கிருேம். அகிம்சை நெறி பலமுறை, பல இடங்களில் வலியுறுத்தப்படுகிறது. ஆனுல் இதே சமயத்தில் புரட்சிகரமான ஓர் ஆவேசமும், எந்தவித உடன்பாட்டையும் பொறுத்துக் கொள்ள முடியாத ஓர் தீவிரமும் உள்ளது. மக்கள் முன்னேற்றப்

பாதையை நோக்கிப் புறப்பட்டுவிட்டனர். வருங்காலம் அவர்கள் கையில் உள்ளது. எச்சக்தியாலும் அவர்களது முன்னேற்றத்தைத் தடுக்கமுடியாது. இப்படிப் பல முறைகளிலும் சிறந்து விளங்கும் இந் நாவல்தான், அவரது படைப்புகளிலே புரட்சி வேகமும், பண்பட்ட படைப்புத் திறனும் கொண்டதாகும். சமூக அநீதிகளுக்கெதிராக எழுப்பப்படும் புரட்சிக் குரல், கண்டனத்தை முழுமையாகக் காட்டுகிறது. கோதானில் ஒரு விவசாயி கதாநாயகனைச் சித்தரிக்கப்பட்டுள்ளது இலக்கியக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, அந் நாவலை ஒப்பற்றதொரு நாவலாக ஆக்கிவிடுகிறது. ஆனால் புரட்சியின் உத்வேகத்திலும், தீவிரத் தன்மையிலும் அது கர்ம பூமியை மிஞ்ச முடியாது. கோதானத்தின் ஹோரியை, சூர்தாஸிடன் தான் ஒப்பிடமுடியும், கர்ம பூமியிலோ புரட்சிகரமான பாத்திரங்களுக்கு அளவே இல்லை.

## 10

பிரேம்சந்தின் வாழ்க்கையில் கடைசி சில வருடங்களில் ஜைனேந்திரர் அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். லட்சுமணபுரி அமீனுதுல்லா பூங்காவின் அருகே பிரேம்சந்த் வசித்துக் கொண்டிருந்தபோதுதான், ஜைனேந்திரர் முதன் முதலாக அவரைச் சந்தித்தார். இச் சந்திப்புப் பற்றி அவர் எழுதுகிறார் :

'மாடிப்படிகளின் மேலேயிருந்து கீழே நின்ற என்னை எட்டிப் பார்ப்பவரைக் கண்டதும் எனக்கு எப்படியோ ஆகிவிட்டது. மேலே நின்றவருக்கு, அடர்த்தியான மீசை. சுமார் ஐந்து ரூபாய் பெறுமானமுள்ள லால் இம்லி கம்பளியைப் போர்த்திக் கொண்டிருந்தார். அதுவும் நாள்பட்டு, சிக்குபட்டுப் போயிருந்தது. ஒரு கற்றை மயிர் முன்வந்து விழுந்து முன் நெற்றியைத் மறைத்துக் கொண்டிருந்ததால் நெற்றி சிறியதாகத் தென்பட்டது. மண்டைகூட அப்படித்தான். உடலுக்கு அவ்வளவு பொருத்தமாக இல்லை—சிறியதாகத் தோன்றியது. சாதாரண வேட்டி அணிந்திருந்தார். அதுவும் முழங்காலுக்குக் கொஞ்சம் கீழே நின்றது. தூக்கக் கலக்கத்தில் விழிகள் கனத்திருந்தன. சரி—இவர்தான் பிரேம்சந்த் என்று தெரிந்துவிட்டது. வந்தாகிவிட்டது; இனித் தவிர்ப்பதற்கில்லை. அந்த நிமிடம் எதிரே நிற்பவர் தான் பிரேம்சந்த் என்ற உணர்வு எனக்கு ரசிக்கவில்லை. என் காலத்திலேயே இவர்தான் பிரேம்சந்த் என நான் ஏற்கவேண்டியதுதானா? எத்தனை தூரத்திலிருந்து, எத்தனை உயர்வான நம்பிக்கையுடன்,

இவ்வுருவத்தைக் காணவா வந்திருக்கிறேன். என் இதயத்தில் நான் கற்பனை செய்து வைத்திருந்த, உண்மையான, கவர்ச்சிகரமான, பிரேம்சந்தை அப்படியே பத்திரப்படுத்திக்கொண்டு இங்கிருந்து போய்விடலாமா என்று ஒரு கணம் தோன்றியது. பிரேம்சந்த் என்ற பெயரில் என் எதிரே நின்றுகொண்டிருந்த உருவம் மிக மிகச் சாதாரணமாய், சிறியதாய், நாட்டுப்புறமாய்த் தோன்றியது. இதற்குள் அவர்—'வா... வாப்பா...' என்று மீண்டும் அழைத்தார்.

ஒரு கையில் பெட்டியை எடுத்துக்கொண்டு நான் படிகளில் ஏறத் தொடங்கியதும் அவர் கீழே இறங்கிவந்து என் கரத்திலிருந்த பெட்டியை வாங்கிக்கொள்ள முயன்றார். ஆனால் நான் பெட்டியை எடுக்கவிடாததால், வேறு ஒன்றிரண்டு சாமான்களை எடுத்துக்கொண்டு என்னுடன் மேலே ஏறிவந்தார்.

மேலே சென்றதும், மேலோட்டமாகப் பார்த்ததுமே வீடு சீராக ஒழுங்காக வைத்துக்கொள்ளப்படவில்லை, என்று தெரிந்தது. திறந்த, வெளிமுற்றத்தில் தண்ணீர் இங்கு மங்கும் கொட்டிக் கிடந்தது. பொருள்கள் எதுவும் அதனதனிடத்திலில்லை. ஆனால் இதன்பின் இதையெல்லாம் கவனிக்க என் கருத்துக்கோ, கண்களுக்கோ அவகாசமிருக்கவில்லை. சற்றுநேரத்திற்கெல்லாம் இந்த இடத்திற்கு நான் புதியவன் என்பதே எனக்கு மறந்து போய் விட்டது. எனது விமர்சனக் கண்ணோட்டம் அப்படியே சோர்ந்து உறங்கிவிட்டது.

எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு பிரேம்சந்த் என்னுடன் பேச உட்கார்ந்துவிட்டார். 7 அடித்து, 7½ ஆகி, எட்டும் ஆகி விட்டது. ஆயினும் எங்கள் பேச்சில் வேகம் குறையவில்லை. இதற்கிடையில் எனக்குப் பல விஷயங்கள் மறந்தேபோயின. இவர்தான் பிரேம்சந்த்—இந்தி நாவலின் முடிசூடா மன்னன் என்பது மறந்துவிட்டது. அதே இலக்கிய உலகின் கரையிலே பிரமித்து நிற்கும், சிறு குழந்தை போன்றவன் நான் என்பதும் நினைவிலில்லை. சற்று நேரத்திற்கு முன்தான் இம்மனிதரின் தோற்றமும் உருவமும், என்னுள் வெறுப்பையும், பிரமையையும் ஏற்படுத்தியது என்பதுகூட மறந்துவிட்டது. எங்களுக்குள்ளே நடந்த உரையாடலில், ஆழ்ந்த நெருக்கத்தை உணர்ந்த எனக்கு யாவுமே மறந்துவிட்டது.'

1930 இல் 'ஹம்ஸ்'—என்ற சிறுகதைப் பத்திரிகையொன்றை பிரேம்சந்த் வெளியிட்டார். காந்தியடிகள் தண்டியாத்திரை துவங்கி 15 நாட்கள் தானிருக்கும். இச்சமயம் அவர் நிகமுக்கு எழுதினார்—'பங்குனி மாதத்திலிருந்து, அதாவது புத்தாண்டிலிருந்து 'ஹம்ஸ்' என்ற இந்தி பத்திரிகையொன்று வெளியிட இருக்கிறேன். 64 பக்கங்கள் கொண்ட இதில் பெரும்பாலும்

கதைகள்தானிருக்கும். இது முட்டாள்தனம்; பெருத்த தலை வேதனை; இதனால் லாபமிருக்காது. இருப்பினும் முட்டாள்தனமாக எதையேனும் செய்யவிரும்புகிறேன். என் வாழ்க்கை முழுவதுமே இத்தகைய தவறுகளுடன் கழிந்துவிட்டது. அதில் இன்னும் கொஞ்சம் சேரட்டும்.'

'ஹம்ஸ்' பத்திரிகையில் அரசியல் பற்றிய தலையங்கங்கள் வந்ததால் பிரதிகூலமான சூழ்நிலையை எதிர்நோக்க வேண்டிய தாயிற்று. அச்சகத்திடம் 1000 ரூபாய் ஜாமீன் கோரப் பட்டது. அச்சகம், பத்திரிகை இரண்டையுமே மூடிவிடலாம் என பிரேம்சந்த் நினைத்தார். நவம்பர் மாதத்தில் விதேசித் துணிக் கடையின் முன் மறியல் செய்ததற்காக சிவராணி தேவி கைது செய்யப்பட்டார். இரண்டு மாத தண்டனை கிடைத்தது. வீட்டி லிருந்து பழக்கப்பட்டவர் பிரேம்சந்த். வெளியில் அதிகம் செல்லாத அவர், பின்னாளில் வெளியூர்களுக்கு நிறையப் பிரயாணம் செய்தார். இது அவருக்குப் பலதரப்பட்ட நேரிடை யான அநுபவத்தை அளித்தது. தில்லி சென்று ஜைனேந்திர ருடன் பத்து நாட்கள் தங்கினார். பாட்னா சென்றார். ஆனால் இரயில்வே நிலையத்தில் அவரை வரவேற்கக் கூடியிருந்தவர்களால் அவரை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. ஸ்டேஷ னிலேயே இரவை ஒருவாறு கழித்துவிட்டு அவர் திரும்பிவிடலா மென நினைத்த சமயம் வரவேற்புக் கமிட்டியினர் அவரைத் தேடிப் பிடித்தனர்.

இச் சமயத்தில் தான் 'சமர் யாத்திரா' என்னும் சிறுகதைத் தொகுதி வெளியாயிற்று. 1930 ஆம் ஆண்டில் நாட்டிலிருந்த பரபரப்பு, உத்வேகம், புதியதொரு எழுச்சியை இதிலுள்ள கதைகள் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

நவல்கிஷோர் அச்சகத்தில் உரிமையாளர் காலமானதும் பிரேம்சந்த் இத்தாபனத்தை விட்டுப் பிரிந்துவிட்டார். ஸ்தாபனம் கோர்ட் அப் வார்ட்ஸிடம் ஒப்படைக்கப்பட்டுவிட்டது. சொத்துக் களைப் பரிசீலிக்கப் புதிய அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். பிரேம் சந்த் 1931 மே மாத நடுவில் பனாரஸ் திரும்பினார். லாமாகியில் இருந்துகொண்டு, தமது அச்சகத்தைக் கவனிக்க தினமும் சென்றுகொண்டிருந்தார்.

பிரேம்சந்த் தமக்கிருந்த தொல்லைகள் போதாதென்று வினோத் சங்கர் வியாஸிடமிருந்து 'ஜாகரன்' பத்திரிகையையும் தாம் நடத்த எடுத்துக்கொண்டார். மாதமிருமுறை வெளியான அப் பத்திரிகைக்கு 200 சந்தாதார்களே இருந்தனர். ஆகஸ்ட் 22 ஆம் தேதி, பிரேம்சந்தை ஆசிரியராகக் கொண்டு இப் பத்திரிகை வெளிவந்தது. அவர் இதை வார இதழாக மாற்றி

விட்டார். இதைப் பற்றிய, தமது இலட்சியத்தை பிரேம்சந்த் வெளிப்படுத்துகிருர் :

'இக் குழந்தையை அச்சமற்றவளாக, உண்மையுள்ளவளாக, உழைப்பாளியாக, உடல்வலுவும், சிந்தனை சக்தி உள்ளவளாகவும் நாம் உருவாக்க முயல்வோமாக. இது யாரையும் துதிபாடாது. ஆனல் பண்புநெறியைக் கடைப்பிடிக்கும். சில சமயம் கசப்பான வற்றைச் சொல்ல நேரிடலாம். ஆனல், அதுவும் நாட்டின் நலனைக் கருத்தில் கொண்டதாக இருக்கும்....'

'ஹம்ஸ்', 'ஜாகரன்' இவ்விரண்டினலும் ஏற்பட்ட நஷ்டம், பிரேம்சந்தின் பொருளாதார நிலையை மிகவும் பாதித்துவிட்டது. அவரது கவனம் திரைப்பட உலகின் பால் திரும்பியது. சேவா சதனைப் படமாக எடுக்க 750 ரூபாய், அவருக்குத் தரப்பட்டது. திரைப்படங்களுக்கு கதைவசனம் எழுத அவர் பம்பாய்க்கு அழைக்கப்பட்டார். அஜந்தா சினிடோன், மொத்தம் ஆறு கதைகள் எழுத வருடமொன்றுக்கு 8000 ரூபாய் தருவதாக, அவருடன் ஒப்பந்தம் செய்துகொண்டது. ஜைனேந்திரருக்கு எழுதிய கடிதத்தில் இதைப்பற்றி அவர் எழுதுகிருர் :

'ஒரு திரைப்பட கம்பெனி என்னை பம்பாய் வரும்படி அழைத்துள்ளது. மாதச் சம்பளத்திற்கு அல்ல; வருடம் 8000 ரூபாய் ஒப்பந்த முறையில் தருவதாக ஏற்பாடு. 'சரி' என்று கூறி இதை ஏற்றுக்கொள்வதைவிட எனக்கு வேறு வழியில்லை. ஒன்று நான் பம்பாய் செல்லவேண்டும். அல்லது எனது நாவல்களைக் கடைத் தெருவில் விலை கூறவேண்டும். இது பற்றிய உனது அபிப்பிரா யத்தை அறிய விரும்புகிறேன். நான் தினசரி காரியாலயம் செல்ல வேண்டுமெனக் கட்டாயமில்லை, எங்கிருந்து வேண்டு மானலும், என் விருப்பப்படி நான் எழுதலாம். ஒரு வருடத் திற்குள் ஆறு படங்களுக்குத் திரைக்கதை—வசனம் எழுதித்தர வேண்டும்—அவ்வளவுதான். ஒரு வருடம் பம்பாய் சென்று பார்த்தாலென்ன—என்று தோன்றுகிறது. ஒரு வருடம் அங்கே இருந்த பின், ஏதாவது ஒப்பந்தம் கிடைக்கக்கூடும். இங்கிருந்து கொண்டே மூன்று, நான்கு திரைப்படங்களுக்குக் கதை—வசனம் எழுதித் தந்தால் நான்கு, ஐந்து ஆயிரம் ரூபாய் கிடைக்கலாம். இதன் மூலம் 'ஹம்ஸ்' 'ஜாகரன்' இரண்டும் பிழைத்துக் கொள்ளும். எனக்கும் பணத்தைப் பற்றிய கவலை இருக்காது.'

எப்படியும் 1934 மே மாதம் 'ஜாகரன்' பத்திரிகையை நிறுத்தும்படியாகத் தானயிற்று. மே மாதக் கடைசியில் பிரேம் சந்த் பம்பாய் சென்ருர். சில வாரங்களுக்குப் பின் சம்பூர்ண னந்தரை ஆசிரியராகக் கொண்டு 'ஜாகரன்', சோஷலிசப் பத்திரிகையாக மீண்டும் வெளிவரத் தொடங்கியது. சரஸ்வதி அச்சகம் தான் தொடர்ந்து அதை அச்சிட்டு வெளியிட்டது.

குடும்பச் சூழலுக்கும், பாசத்திற்கும் பழக்கப்பட்டுப் போயிருந்த பிரேம்சந்த் பம்பாய் சென்றதும் தனிமையை மிகவும் உணரலானார். தாம் புறப்பட்டு வந்ததைக் குறித்துப் பச்சாதாபப் பட்டார். அவரது இரு பிள்ளைகளும் அலகாபாத்தில் காயஸ்த பாடசாலையில் சேர்க்கப்பட்டிருந்தனர். வீடு கிடைத்ததும் சிவராணி தேவி பம்பாய் புறப்பட்டு வருவதாக ஏற்பாடு. பிரேம் சந்த் சிவராணி தேவிக்கு எழுதினார் :

'நான் 31 ஆம் தேதி இங்கு வந்து சேர்ந்தேன், ஒரு நண்பரின் இல்லத்தில் விருந்தினராக இருக்கிறேன். நான் பல வீடுகள் பார்த்தேன். மூன்று அறைகள் கொண்ட ஒரு வீட்டிற்கு வாடகை 50 ரூபாய். ஐந்து அறைகள் இருந்தால் 75 ரூபாய் வாடகை. நான் இன்னும் எந்த வீட்டையும் முடிவு செய்யவில்லை. இன்னும் ஒன்றிரண்டு நாட்களில் ஏதாவதொரு முடிவிற்கு வரவேண்டும். நான் இந்த ஊரில் நிலைத்திருப்பேனா, இல்லையா என்பதைக் கூடத் தீர்மானமாகச் சொல்ல முடியாமலிருக்கிறது.'

இதற்கு சில நாட்களுக்குப் பின்னர் அவர் ஜைனேந்திரருக்கு எழுதினார் :—'நான் ஒரு வீடு எடுத்துக் கொண்டுவிட்டேன். தாதரிலுள்ள ஒரு ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு இங்கு தங்கி யிருக்கிறேன். இந்த உலகமே தனி. யாவற்றையும் பற்றிய மதிப் பீடுகளே வேறானவை. இந்த வாழ்க்கையைப் புரிந்துகொள்ள இன்னும் முயற்சி செய்துகொண்டு இருக்கிறேன். இந்த விஷயம் சம்பந்தப்பட்ட நூல்களைப் படித்துக் கொண்டிருக்கிறேன். இது வரையில் ஒன்றும் எழுதவில்லை. தன்னுவை அங்கே விட்டுவிட்டு ஜூலையில் என் குடும்பத்தினர் இங்கு வந்துவிடுவார்கள். எப்படி யாவது ஒரு வருடத்தைக் கழித்துவிடுவேன். பிறகு பார்ப்போம்.'

ஜூலை 23 ஆம் தேதி வாரணாசியை அடைந்த பிரேம்சந்த் 31 ஆம்தேதி பம்பாய் திரும்பினார். 'தொழிலாளி' (மஜ்தூர்) என்ற படத்திற்கான வசனங்களை அப்போது எழுதிக் கொண்டிருந்தார். திரைப்படக்காரர்கள் கதையின் வெளி உருவ அமைப்பை அமைத்துத் தந்தனர். பிரேம்சந்த் அதற்கு ரத்தமும், சதையும் ஏற்றி ஒரு முழுமையான வடிவத்தைத் தருவதில் ஈடுபட்டிருந்தார். தேசப்பற்று நிறைந்த ஓர் ஆலை முதலாளியை இப்படம் சித்த ரித்துக் காட்டியதென்றாலும், திரைப்படத் தணிக்கையாளர்கள் இதை ஏற்கவில்லை. இருப்பினும் பஞ்சாப், தில்லி, ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம் போன்ற இடங்களில் இது திரை யிடப்பட்டது. தொழிலாளிகளிடையே பெரும் பரபரப்பை, இப் படம் ஏற்படுத்தியதால், போலீசாரை அழைக்க வேண்டி நேர்ந்தது. முடிவில் இந்திய அரசாங்கம் இப் படத்தைத் திரை யிடக்கூடாதெனத் தடை விதித்துவிட்டது.

இத் திரைப்படத்தில் பிரேம்சந்த் சில நிமிடங்கள் தோன்றுகிறார். தொழிலாளி, முதலாளிகளுக்கிடையே உள்ள தகராறைத் தீர்த்துவைக்கும் பஞ்சாயத்தாராக அவர் தோன்றுகிறார். இதற்கிடையில் அவரது அச்சகத்தின் நிலைமை மோசமாகிவிட்டது. தொழிலாளிகளுக்கு மூன்று மாதச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. தொழிலாளிகளிடம் நிர்வாகி சரியாக நடந்து கொள்ளவில்லை. தொழிலாளிகள் வேலைநிறுத்தம் செய்தனர்.

பிரேம்சந்த் தமது பம்பாய் வாசத்தைத் தென்னிந்திய சுற்றுப் பயணத்திற்காகப் பயன்படுத்திக் கொண்டார். தட்சிண பாரத ஹிந்தி பிரசார சமிதியினர் தங்கள் பட்டமளிப்பு விழாவிற்குத் தலைமையுரை வழங்க அவரை அழைத்தனர். டிஸம்பர் 28 ஆம் தேதி சென்னை போய்ச் சேர்ந்த பிரேம்சந்த், சில நாட்கள் அங்கு இருந்தபின் மைசூருக்கும் அதன்பின் பெங்களூருக்கும் சென்றார்.

அவரது திரைப்பட உலகவாசம் முடிவை நெருங்கிக் கொண்டிருந்தது. அவர் அங்கு மனநிறைவைக் காண இயலவில்லை. கலை மனிதனை உயர்த்த வேண்டுமென அவர் விரும்பினார். ஆனால் திரைப்படக்காரர்களுக்கோ மக்களை மகிழ்விக்க வேண்டுமென்பது தான் குறியாக இருந்தது. ஜைனேந்திரருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் பிரேம்சந்த் பின்வருமாறு எழுதுகிறார் :—'நான் என்னென்ன நினைத்துக்கொண்டு இங்கு வந்தேனோ அவற்றில் ஒன்றுகூட நிறைவேறும் என்று தோன்றவில்லை. இத் திரைப்படத் தயாரிப்பாளர்கள் எவ்விதமான கருத்துக்களுக்கும், கதைகளுக்கும் பழக்கப்பட்டுப் போயிருக்கிறார்களோ, அதிலிருந்து கடுகத்தனை கூட நகரமாட்டார்கள். ஆபாசத்தை அவர்கள் மனதை மகிழ்விப்பது, என்கிறார்கள். அற்புத சாகச செயல்களில் தான் இவர்களுக்கு நம்பிக்கை. ராஜாக்கள், ராணிகள், மந்திரிகளின் சூழ்ச்சிகள், சண்டைக் காட்சிகள், முத்தமிடுதல்...இவைகள்தாம் இவர்களின் முக்கிய ஆதாரம்—உயிர்நாடி. படித்தவர்களும் பார்க்க விரும்பக்கூடிய சில சமூகக் கதைகளை எழுதியிருக்கிறேன். ஆனால் இவர்கள் அதைப் படமாக்கத் தயங்குகின்றனர். இவை ஓடுமோ, ஓடாதோ என்ற சந்தேகம்.'

1935 ஏப்ரல் 4ஆம் தேதி, பிரேம்சந்த் திரைப்பட உலகத்தின் தொடர்பை உதறிவிட்டுப் புறப்பட்டுவிட்டார். தம் நண்பரொருவருக்கு எழுதினார் :—'முடிவு செய்தாகிவிட்டது. 25 ஆம் தேதி நான் ஊர் திரும்புகிறேன். அஜந்தா கினிடோன் மூடப்படுகிறது.' ஒப்பந்த காலம் முடிய மூன்று மாதங்கள் இருக்கும்போதே பிரேம்சந்த் புறப்பட்டுவிட்டார்.

அக் காலத்தில் திரைப்படங்களிருந்த நிலை குறித்து, வன்மையாகக் கண்டித்து ஒரு கட்டுரை எழுதினார். அதில் இலக்கியம், திரைப்படம் இவ்விரண்டின் இலட்சியங்களை ஒப்பிடுகிறார் :—

'பொதுமக்கள் ரசனை எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதை இலக்கியம் காட்டுகிறது. பொதுமக்களின் ரசனையை அது பின்பற்றிச் செல்லுவதில்லை. ஆனால் திரைப்படம் பொது மக்களின் ரசனையைத் தொடர்ந்து செல்கிறது. அவர்கள் எதை விரும்புகிறார்களோ, அதைத் தருகின்றது. இலக்கியம் நமது அழகுணர்வைத் தட்டியெழுப்பி நமக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. திரைப்படமோ, ஆபாச உணர்வுகளைத் தூண்டிவிட்டு நம்மை வெறிகொள்ளச் செய்கிறது. திரைப்படத் தயாரிப்பாளர்களிடம் இதற்கு நிவாரணம் ஏதுமில்லை. ஒரு பொருளுக்குத் தேவை இருக்கிறவரையில், கடைத்தெருவில் அது இருக்கத்தான் செய்யும். இதை யாராலும் தடுக்க முடியாது. திரைப்படமும், இலக்கியமும் —ஒரே தன்மையுடையதாய், ஒரே இலட்சியத்தைக் கொண்டதாய் இயங்கும் நாட்கள் இன்னும் வெகுதூரத்தில் இருக்கின்றன. பொதுமக்களின் ரசனை பண்பட்டு உயரும்போது, மனிதனை இழிந்த நிலைக்குத் தாழ்த்தும் சக்திகளை அது தானாகவே வெறுக்கத் துவங்கிவிடும். இது என்று ஏற்படுகிறதோ அன்றுதான் இலக்கியத்தில் இருப்பது போன்ற, பண்பட்ட ரசனையை, நாம் திரைப் படத்திலும் காணமுடியும்.'

## 11

பம்பாய் வாசம் பிரேம்சந்திற்குப் பொருளாதாரரீதியில் குறிப்பிடத்தக்க பயனை அளித்ததாகக் கூறமுடியாது. ஜைனேந்திரருக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் அவர் தமது வரவு செலவுகளைக் குறிப்பிட்டிருக்கிறார் :

'பம்பாயிலிருந்து நான் என்ன கொண்டுவந்திருக்கிறேன்? கிடைத்தது 6300 ரூபாய்தான். இதில் பிள்ளைகள் 1500 எடுத்துக் கொண்டார்கள். பெண்ணுக்கு 400 ரூ. அச்சகத்திற்கு 500 ரூ. சிக்கனமாகப் பத்துமாத காலம் பம்பாயில் வாழ்க்கை நடந்தியது 2500 ரூபாய்க்குக் குறையாது. மீதி 1400 ரூபாய், மன உளைச்சல் இரண்டையும்தான் கொண்டுவந்திருக்கிறேன்.'

'ஜாகரன்' நிறையப் பணத்தை விழுங்கிவிட்டிருந்தது. ஒருவாறு அது நிறுத்தப்பட்டுவிட்டது. 'ஹம்ஸ்' திணறிக் கொண்டு இருந்தது. அதன் நிலையும் மோசம்தான். அச்சகத்தையும், பத்திரிகையையும் அலகாபாத்திற்குக் கொண்டு போனாலென்ன என பிரேம்சந்த் நினைத்தார். எந்தத் திட்டமும் சரிப்பட்டு வரவில்லை. முடிவில் 'ஹம்ஸ்' பத்திரிகை, பாரதீய சாகித்திய பரிஷத்திடம் ஒப்படைக்கப்பட்டது. கே. எம். முன்ஷி

யுடன் பிரேம்சந்த் இதன் இணை ஆசிரியரானுர். இத்தகைய முயற்சிகள் கூட பொருளாதார நெருக்கடியை முற்றிலும் தீர்த்துவிட இயலவில்லை.

தம் பிற்கால வாழ்வில் பிரேம்சந்த் நாட்டில் விரிவாகச் சுற்றுப் பிரயாணம் செய்தார் என்று கூறலாம். திடீரென தெம்பும் உற்சாகமும் பீறிட்டுவிட்டது. அணைவதற்குமுன் சுடர்விட்ட ஒளிதான் அது. வந்த அழைப்புகளையெல்லாம் ஏற்றுக் கொண்டார். எல்லா இடங்களுக்கும் சென்ருர். அலகாபாத், பீஹாரிலுள்ள பூர்ணியா, லட்சுமணபுரி, தில்லி, லாகூர் முதலிய இடங்களுக்குச் சென்ருர். நிரந்தரமான பிரிவொன்று ஏற்படும் முன் முடிந்த அளவு தான் பிறந்த நாட்டைப் பார்த்துவிட வேண்டுமென்ற அவாக்கொண்டிருந்தார்.

இந்துஸ்தானி அகாதமியின் கூட்டத்தில் கலந்துகொள்ள அவர் அலகாபாத் சென்ருர். அச் சமயம் முன்னணியிலிருந்த சில முற்போக்கு எழுத்தாளர்களைச் சந்தித்து அவர்களுக்குத் தமது ஆசியை வழங்கிஞர். இந்தி, உருது எழுத்தாளர்கள் ஒருவரையொருவர் நெருங்கிவர வகைசெய்யும் இந்துஸ்தானி சங்கம் ஒன்றை ஏற்படுத்த அவர் பெரிதும் ஆசைப்பட்டார். ஜைனேந்திரரின் ஒத்துழைப்புடன், இச் சங்கத்தின் கிளைகள், தில்லியிலும், லாகூரிலும் நிறுவப்பட்டன. முற்போக்கு எழுத்தாளர்களின் கூட்டத்திற்குத் தலைமை வகிக்க பிரேம்சந்த் லாகூர் வந்தார். 1936 ஏப்ரல் 9, 10 தேதிகளில் இக் கூட்டம் நடைபெற்றது. 1936 ஜனவரியிலேயே பிரேம்சந்த் இச் சங்கத்தை வரவேற்று இவ்வாறு கூறியிருந்தார் :

'ஆழ்ந்த சிந்தனைப் போக்குடைய, படித்த நம் இளைஞர்கள் நம் இலக்கியத்தில் புதியதொரு விழிப்பையும், உத்வேகத்தையும் ஏற்ற விரும்புவதைக் காண நான் உண்மையாகவே மகிழ்ச்சியடைகின்றேன். இந்த நோக்கத்துடன் தான் இலண்டனில் முற்போக்கு எழுத்தாளர்களின் இச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. இச் சங்கத்தின் அறிக்கை, நமது நம்பிக்கையைத் தூண்டிவிடுவதாகவுள்ளது. இச் சங்கம் தான் வகுத்துள்ள நெறியில் உறுதியுடன் நிற்குமானுல் நமது இலக்கியத்தில் புதியதொரு சகாப்தம் தோன்றக்கூடும்.'

தமது தலைமையுரையில் அவர் கீழ்க்கண்டவாறு கூறிஞர் :—
'ஏனையவற்றைப் போலவே கலையையும், அதனுல் ஏற்படும் பயனுல்தான் நான் மதிப்பிடுகிறேன் என்று சொல்லிக்கொள்வதில் எனக்கு எவ்விதத் தயக்கமும் இல்லை. அழகைப் பற்றிய நமது மதிப்பீடுகளை நாம் மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கும். அன்றும், இன்றும் கலை என்பது குறுகியதொரு நோக்கம்கொண்ட உருவத்தில் போற்றப்பட்டுவருகிறது. வாழ்க்கைப் போராட்டத்தி

லுள்ள எல்லையற்றதோர் அழகைக் காணும் பரந்த கண்ணோட்டத்தை அது இன்னும் தன்னுள்ளே வளர்த்துக் கொள்ளவில்லை...

'பணத்தை நேசிக்கும் எவருக்கும் இலக்கியக் கோவிலில் இடமில்லை. இலக்கியப் பணியாற்றுவதையே எவர்கள் தங்கள் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டவர்களோ, எவருடைய இதயத்தில் வேதனையின் துடிப்பும், அன்பின் ஆவேசமும் உள்ளதோ, அத்தகைய பக்தர்கள்தான் இங்கு தேவை.

'சமுதாயத்தின் கொடியை உயர்த்திப் பிடித்துச் செல்லும் வீரர்கள் நாம்' என அறிவித்தார் அவர்.

லட்மணபுரியிலிருந்து பிரேம்சந்த் லாகூர் சென்றார். ஆரிய பிரதிநிதி சபையினர் இங்கு அவருக்கு மாபெரும் வரவேற்பொன்று அளித்தனர். பல்வேறு கூட்டங்களில் அவர் கலந்துகொண்டார். தமது உரைகளிலெல்லாம், இந்தியும் உருதுவும் நெருங்கி இணையும்படி செயல்புரியவேண்டிய அவசியத்தை வலியுறுத்த மறக்கவில்லை. பாரதீய சாகித்திய பரிஷத்தின் கூட்டத்தில் கலந்து கொள்ள அவர் லாகூரிலிருந்து லட்மணபுரி சென்றார். காந்தியடிகளும், நேருவும் இக் கூட்டத்தில் கலந்துகொண்டனர். கூட்டத்தின் நடவடிக்கைகள் இந்தியில் நடக்க வேண்டுமா, உருதுவிலா என்பது பற்றிக் கருத்து வேற்றுமையும், பலத்த சர்ச்சையும் மூண்டது. காந்தியடிகள் இந்துஸ்தானியில் நடத்தலாமென யோசனை கூறியதும் மௌலானா அப்துல் ஹக் சீற்றம் கொண்டவராய் கூட்டத்திலிருந்து வெளியேறிவிட்டார்.

பம்பாயிலிருந்து திரும்பிய பின் 'கோதான்' நாவலை எழுதுவதில் பிரேம்சந்த் முழுமூச்சுடன் இறங்கினார். அதை முடித்த பின்தான் லாமாகியை விட்டே கிளம்பினார். இதற்கிடையில் அவரது கவனத்தைக் கலைக்க, இங்குமங்கும் மாநாடுகள், கூட்டங்கள் பல நடந்தன. 1936 மே மாதக் கடைசியில் 'கோதான்' அச்சகத்தைவிட்டு வெளிவந்தது.

எழுத்தாளர் என்ற முறையில் பிரேம்சந்த் படைத்த நூல்களில் 'கோதான்' ஒரு மகத்தான, மிகச் சிறந்த படைப்பாகும். அவரது எழுத்துக்கள் யாவுமே எதைக் குறிக்கோளாகக்கொண்டு இயங்கினவோ அதன் உன்னத சிகரம் இது. நிலப் பிரபுத்துவம், தொழில்மயமாக்கும் முயற்சி இரண்டையுமே இந் நாவலில் அவர் வன்மையாகச் சாடி இருக்கிறார். வயல்வெளியாக இருந்தாலென்ன? தொழிற்சாலையாக இருந்தாலென்ன? பாட்டாளியின் வேதனைக்குக் குறைவில்லை. எங்கும் அவன் பிழிந்தெடுக்கப்படுகிறான், எனக் காட்டும் இந் நாவலில் இந்தியாவின் துயரங்களை 'ஹோரி' என்ற பாத்திரப் படைப்பாக உருவாக்கியுள்ளார். எத்தனையோ நூற்றாண்டுகளாக அடக்கி, ஒடுக்கி, நசுக்கப்பட்டு வந்தும் தனது தனித் தன்மையை, பரந்த உள்ளத்தை, விரிந்த

நோக்கத்தை, உறுதியுடன் பற்றி நிற்கும் இந்தியாதான் ஹோரி. கோபர், தனியா, ஜுனியா, மேஹ்தா, மாலதி...போன்ற பல முக்கியப் பாத்திரங்கள் காட்சிதருகின்றனர். கிராமிய உலகம், அசுரத்தனமான வேகத்துடன் சுரண்டல் நடைபெற்று வரும் நகரவாழ்வின் உலகம், இவ்விரண்டிலிருந்தும் பாத்திரங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன. தீமைகளையும், அநியாயத்தையும் அவர்கள் எதிர்க்கின்றனர். உலகத்தை மாற்ற விழையும் அவர்கள் தங்களைத் தாங்களே மாற்றிக்கொள்வதுடன், மேன்மேலும் உயர்ந்தவர்களாய், புரட்சிக் கருத்துடையவர்களாய் மாறுகின்றனர்.

இந்திய நாவல்களின் வரலாற்றிலே 'கோதானம்' ஒரு மைல்கல். இந்தியாவில் எந்த எழுத்தாளனும் கிராமிய வாழ்க்கையைச் சித்திரிப்பதில் தன் கலைத்திறமையை இத்தனை அற்புதமாகக் காட்டியதில்லை. இதிகாச வரலாறு போன்ற விரிவான, பரவலான கதை அம்சத்தைக் கொண்டது. சாதாரண கிராம மக்களான பாத்திரங்கள் நம் கண் முன்னே வரலாற்று முக்கியத்துவம் பெற்றுவிடுகின்றனர். சுரண்டலும், துன்பமும் இல்லாததொரு உலகத்தை, சமதர்ம வாதத்தின்கீழ், நாட்டுச் சாயலுடன் பிரேம்சந்த் நமக்குத் தருகின்றார். இத்தகையதொரு உலகத்தை நடைமுறைக்குக் கொணரப் போராடியவாறே நாவலின் கதாநாயகன் ஹோரி உயிர்துறக்கின்றான்.

மூன்று வருட கால உழைப்பின் சின்னம் 'கோதானம்'. 1932 இல் இந் நாவலைத் தொடங்கினாரென்றாலும், இம் மூன்றாண்டு காலத்தில் நிறைய சிறுகதைகள், கட்டுரைகள், தலையங்கங்களையும் அவர் எழுதினார். இதைத் தவிர அன்றாட அலுவல்களும் அவருக்கு நிறைய இருந்தன. கூட்டங்கள், மாநாடுகள், சுற்றுப் பிரயாணங்கள் எனப் பல அலுவல்கள் இருந்தன. அவரது ஆரோக்கியம் இப்பொழுது முற்றும் பாதிக்கப்பட்டிருந்தது. குடற் புண், மகோதரம்—இரண்டும் அவரை நோய்ப் படுக்கையில் வீழ்த்திவிட்டன.

ஜூன் 16 ஆம் தேதி அன்று அவர் பலமுறை வாந்தி எடுத்தார். மலத்திலும் ரத்தப்போக்கு ஏற்பட்டது. வயிற்றிலே கடுமையான வலி இருப்பதாக அவர் முறையிட்டார். இக் கடும் நோயிலிருந்து அவர் மீள முடியாமலே போயிற்று. ஜூன் 19 ஆம் தேதியன்று கார்க்கியின் மறைவு குறித்து 'ஆஜ்' காரியாலயத்தில் இரங்கற் கூட்டமொன்று நடந்தது. நோயுற்றிருந்த அந்நிலையிலும் பிரேம்சந்த் கூட்டத்தில் கலந்துகொண்டது மட்டுமின்றி அதற்கென விசேஷ உரை ஒன்றும் எழுதியிருந்தார். இரவு இரண்டு மணிக்குத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்ட சிவராணி தேவி பிரேம்சந்த் தமது உரையை எழுதிக்கொண்டிருப்பதைக் கண்டார். அவர் ஆட்சேபித்ததும், பிரேம்சந்த்—'நான் என்ன

செய்வது? என்னால் தூங்க முடியவில்லை; இந்த உரையையும் நான் எழுதியாகவேண்டும்' என்று கூறினாராம். ஆனால் கூட்டத்தில் கலந்துகொண்ட பிரேம்சந்தினால் உரையாற்ற முடியவில்லை. மிக்க பலவீனமாய் இருந்தார். வேறு யாரோ அதைப் படித்தனர்.

25 ஆம் தேதி இரவு அவரது நிலைமை மோசமாகிவிட்டது. புழுக்கமாக இருப்பதாகக் கூறி மகனை விசிறச் சொன்னார். ரத்தமாக வாந்தி எடுத்தார். சிவராணி தேவி ஓடிவந்தார். பிரேம்சந்த், 'ராணி! நான் போகிறேன்!' என்றார். 25 ஆம் தேதிக்குப் பின் பிரேம்சந்திற்கு நல்ல தூக்கமில்லை. மற்ற உபாதைகளும் சேர்ந்து நிலைமையைச் சிக்கலாக்கிக் கொண்டிருந்தன. இத்தகைய நிலையிலும் 'மங்கள சூத்திரம்' என்ற தமது புதிய நாவலை (இந் நாவல் பூர்த்தியடையாமல் நின்றுவிட்டது) எழுத முயற்சி செய்தார்.

ஆகஸ்ட் 2 ஆம் தேதி தம் மூத்தமகனுடன் எக்ஸ்ரேகதிர் பரிசோதனைக்காக அவர் லட்சுமணபுரி சென்றார். இதற்குச் சில நாட்களுக்கு முன்னர் தமது உடல்நிலையைக் குறித்து அக்தர் ஹுசைன் ராய்புரிக்கு எழுதிய கடிதத்தில், 'கடந்த ஒரு மாதமாக நான் நோய்வாய்ப்பட்டுள்ளேன். குடலிலே புண். ரத்தமாகவும் வாந்தி எடுக்கிறேன். என்னால் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை. வைத்தியம் செய்துகொண்டு இருக்கிறேன். ஆனால் இதுவரையில் குணம் ஏதும் தெரியவில்லை. நான் உயிரோடிருந்தால், நமது கருத்துக்களை வெளியிட "இருபதாம் நூற்றுண்டு" (பீஸ்வீம் சகாப்தி) என்ற பத்திரிகையைக் கட்டாயம் வெளியிடுவேன்.'

லட்சுமணபுரியில் நடைபெற்ற வைத்தியத்தினால் பயனில்லை என்றதும் பிரேம்சந்த் வாரணாசி திரும்ப முடிவு செய்தார். இப்பொழுது உடல், வெறும் எலும்புக்கூடாகிவிட்டது. சிவராணி தேவியிடம் இனி நான் பிழைக்கமாட்டேன். இது மகோதரம்' எனக் கூறிவிட்டார்.

இதன்பின் காற்றோட்டமான புதியதொரு இல்லத்தில் அவர் வசிக்கலானார். ஒருகாலத்தில் இது பாரதேந்து ஹரிசந்திரரின் தோட்டவீடாக இருந்தது. பிரேம்சந்தின் கடைசி நாட்களில் அவர்பால் அன்புகொண்ட பல இலக்கிய நண்பர்கள் அவரைச் சூழ்ந்து நின்றனர். கடைசிமூச்சு வரையில் ஜைனேந்திரர் அவருடனேயே இருந்தார். கான்பூரிலிருந்து முன்ஷி தயாராம் நிகம் ஓடோடியும் வந்தார். பிரசாத், நந்த துலாரே வாஜ்பேயி, பண்டித ராம் நரேஷ் திரிபாதி, மற்றும் நிராலாவும் அவரைக் காணவந்தனர்.

இச் சமயத்தில் தான் 'ஹம்ஸ்' பத்திரிகையிடம் ஆயிரம் ரூபாய் ஜாமீன் கோரப்பட்டது. அதில் வெளியான சேத்

கோவிந்த தாஸின் நாடகமொன்றை அரசாங்கம் ஆட்சேபகர மானதாகக் கருதியது. பாரதீய பரிஷத், பத்திரிகையை நிறுத்தி விடுவதென முடிவு செய்து, பிரேம்சந்தின் கையொப்பத்துடன் ஓர் அறிக்கைகூட வெளியிட்டுவிட்டது, பிரேம்சந்த் இதுபற்றி காந்தியடிகளுக்கு ஒரு கடிதம் எழுதினர். பிரேம்சந்த் விரும்பினல் பத்திரிகையைத் தொடர்ந்து வெளியிடலாம் என காந்தியடிகள் எழுதினர். இதன்பின் பிரேம்சந்த் பத்திரிகையின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஜாமீன் தொகை கட்டப்பட்டது. சிவராணி தேவியிடம், 'ராணி! நான் உயிர்வாழ்ந்தாலும் சரி, இல்லா விட்டாலும் சரி—தயவுசெய்து ஜாமீன் தொகையைக் கட்டிவிடு. 'ஹம்ஸ்' தொடர்ந்து வெளியாகட்டும். நான் பிழைத்துக் கொண்டால் இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன். நான் போய்விட்டால் இது எனக்கொரு நினைவுச் சின்னமாக இருந்துவிட்டுப் போகட்டும்,' என்ருர் பிரேம்சந்த்.

ஹம்ஸின் செப்டம்பர் மாத இதழில் பிரேம்சந்தின் 'மகாஜனி சப்யதா' (வட்டித் தொழிலின் நாகரிகம்) என்ற கட்டுரை வெளி யாகியது. இக் கட்டுரையை அவரது இலக்கிய உயிலாக, அந்திம சாசனமாகக் கொள்ளலாம்.

இம் மண்ணுலகில் அவர் கழித்த கடைசி தினமாகிய அக்டோபர் 7 ஆம் தேதி இரவை ஜைனேந்திரர் வர்ணிக்கிருர்:—

பிரேம்சந்த் காலமாவதற்கு முன் தினம் இரவுவேளை—மறு நாள் பொழுது புலர்ந்து 7 மணிக்கு அவரது கண்கள் நிரந்தரமாக மூடிக்கொள்ளப் போகின்றன—நான் அவரது படுக்கையருகே அமர்ந்திருந்தேன். விடியற்காலை மூன்று மணி வரை அவர் என்னிடம் பேசிக்கொண்டிருந்தார். சுற்றிலும் ஒரே அமைதி தேங்கி நின்றது. இருள் கவிந்த சிறிய அறை. எல்லோரும் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். உதட்டிலிருந்து மிக மிகத் தாழ்ந்த குரலில் வெளிப்பட்ட சொற்கள், உருவில்லாமல் கரைந்தன. அவர் கூறுவதை காதுகளினுல் கேட்பதைவிட இதயத்தினுல்தான் கேட்கமுடிந்தது.

அவர் தமது வலது கரத்தை என் முன்னே நீட்டினர்—'சற்று பிடித்துவிடு' என்ருர். கரம் வீங்கி வெளுத்திருந்தது. நான் மெல்ல பிடித்துவிடத் தொடங்கினேன், அவர் ஒன்றும் பேச வில்லை. மௌனமாக இருந்தார். கண்களை மூடிக்கொண்டு படுத் திருந்தார். 'ஹம்ஸ்' பத்திரிகையைப் பற்றி நள்ளிரவிற்கு முன்னரே பேசி முடித்துவிட்டார். பாதி தம் விழிகளாலும், பாதி சொற்களாலும் அவர் தமது ஆசைகளையும், நம்பிக்கைகளையும் வெளியிட்டிருந்தார். 'ஹம்ஸ்' பத்திரிகையைப் பற்றியும், இலக்கி யத்தின் நிலை பற்றியும் அவர் கவலைகொண்டார். தம் குழந்தை

களின் எதிர்காலம் பற்றியும் அவர் கவலைப்பட்டார். என்னிட மிருந்து அவர் சிறிது மன ஆறுதலைப் பெற்ருர் எனலாம்.

விடியற்காலை அந்த மூன்று மணி வேளையில் அவரது வீங்கிய கரத்தை, என் கரத்தால் வருடியவாறு அமர்ந்திருந்த நான் என்னைப் பற்றிய அவரது நம்பிக்கை சரியானதுதானு என வியந்து கொண்டிருந்தேன். நள்ளிரவில் நடைபெற்ற உரையாடலின் போதுகூட நான் துடுக்காக அவரிடம் தர்க்கம் செய்ய முற்பட்டிருந் தேனே!—இது என்னை இப்பொழுது உறுத்தலாயிற்று. நான் என்ன சொல்லவேண்டும்? நானென்ன செய்யட்டும்?

இதற்கிடையில் 'ஜைனேந்திரா' என்று அழைத்த அவர் என்னையே மௌனமாக உற்றுநோக்கிய வண்ணமிருந்தார். அவரது கரத்தை எனது கரங்களினுலும் சேர்த்துப் பிடித்துக் கொண்டேன். பின்னர் அவரை நோக்கி, 'கவலைப்படாதீர்கள், பாபுஜி! உங்களுக்குக் குணமாகிக்கொண்டு வருகிறது. வேலை செய்ய நாங்களெல்லோரும் இருக்கிருேம்' என்றேன்.

அவர் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார். பின்னர், 'இலட்சியவாதம் உதவாது' என்ருர் மெல்ல.

'இலட்சியவாதம்...' என்று ஏதோ சொல்ல வாயெடுத்தேன். அவர் இடைமறித்தார் 'விவாதம் செய்யாதே' என்று கூறியவர் திரும்பிப் படுத்துக்கொண்டு கண்களை மூடிக்கொண்டார்.

சில நிமிடங்களுக்குப் பின்—'வெப்பமாக இருக்கிறது. விசிறு' என்ருர்.

நான் விசிறத் தொடங்கினேன். அவரால் உறங்க முடிய வில்லை. வலி மிக அதிகமாக இருந்தபோதிலும் அவர் அரற்ற வில்லை. மௌனமாய் கண்களைத் திறந்தவண்ணம் படுத்திருந்தார். சில நிமிடங்களுக்குப் பின், 'ஜைனேந்திரா! நீ போய்ப் படுத்துக் கொள்' என்ருர்.

இன்னும் சில மணி நேரத்தில் அவரது வாழ்க்கை முடிந்து விடப் போகிறதென்று எனக்கெப்படி தெரியும்? நான் உறங்கச் சென்றுவிட்டேன்.

விடிந்ததும் மூர்ச்சை அடைந்த அவருக்கு அதன் பிறகு நினைவு திரும்பவேயில்லை.

1936 அக்டோபர் 8 தேதி காலை 7½ மணிக்கு பிரேம்சந்த் இவ்வுலகை விட்டுப் பிரிந்தார்.

பொருளாதார சிரமங்கள், கவலைகள், நோயின் உபாதைகள், மனிதனை இழிவுபடுத்தி, அவனது நம்பிக்கையைச் சிதறடித்த ஒரு வாழ்க்கையுடன் இடைவிடாமல் போராடிப் பிரேம்சந்த் தமது 56 ஆம் வயதில் காலமானுர். வாழ்வின் உயர்விற்காக, இன்னும் உயர்ந்த, சிறந்த, சுதந்திர இந்தியாவிற்காகப் போராடியவாறே அவர் உயிர்நீத்தார். உன்னதநிலையில் இருக்கும் போதே அவர்

மறைந்துவிட்டார். அழகும் வலிமையும் பொருந்திய 'மகாஜனி சப்யதா', 'மங்கள சூத்திரா'வை அவர் எழுதிக் கொண்டிருந்தார். கடைசி மூச்சுவரை, அவரது கொடி உயர்ந்து, பரந்து நின்றது. கணமேனும் அது தாழ்த்தப்படவில்லை. அவர் என்றும் ஒரு போர்வீரர். தாம் அணிந்திருந்த கவசத்துடன் களத்திலே போராடிய வண்ணம் உயர்நீத்தார். தமது வருங்காலத் தலைமுறைகள் நினைவிலிருத்திக் கொள்ளும்படியான பெருமை படத்தக்க செல்வத்தை அவர் விட்டுவிட்டுச் சென்றிருக்கிறார். அம் மகத்தான பரம்பரையின் வாரிசுகள் நாம்.

## 12

பிரேம்சந்த் இலக்கிய அரங்கிலே தோன்றிய சமயம் இந்தி நாவல் இலக்கியம் தன் குழந்தைப் பருவத்திலிருந்தது. 'சந்திர காந்தா சந்ததி' அல்லது 'பூதநாத்'தில் காணப்படுவது போன்ற, அற்புத சாகச நிகழ்ச்சிகளைக் கொண்ட கதைகள்தான் பெரும் பாலும் காணப்பட்டன. அதிசயத்தக்க முறையிலும், நம்ப முடியாத வகையிலும், துப்பறியும் திறமைபெற்ற, பிளேக் என்ற கதாபாத்திரத்தின் தீரச் செயல்கள்தான் இக்கதைகளில் ஒரு மாறுதலைத் தோற்றுவிக்கப் புகுத்தப்பட்டிருந்தன. 'பரிஷா குரு' போன்ற சமூக நாவல்கள் இடையிடையே தோன்றியபோதிலும், அவைகள் இலக்கிய மதிப்பு பெற்றவையாக இருக்கவில்லை; வெறும் சரித்திர முக்கியத்துவம் கொண்ட நாவல்களாகத்தா னிருந்தன.

இந்தி நாவல் இலக்கியத்திற்கு பிரேம்சந்த் தம் படைப்புகளை அளித்த பின்னர், அது முதிர்ச்சியும் முழு வளர்ச்சியும் பெற்றது. தமது படைப்புகளின் மூலம் பிரேம்சந்த் நாவல் இலக்கியத்திற்கு புதியதொரு சமுதாயக் கண்ணோட்டத்தையும், விழிப்பையும், புதிய உணர்வையும் அளித்திருந்தார். அவரது பேனா, வாழ்வை நேர்நின்று, நெருங்கி நோக்கியதுமட்டுமன்றி, அதை உண்மை யுணர்வுடன், யதார்த்தமாகப் பிரதிபலித்தது. பிரேம்சந்த் ஓர் இலட்சியவாதி. தாம் கண்ட கனவுகளுக்கு ஏற்ப வாழ்க்கையை உருவாக்க அவர் மிகவும் ஆசைப்பட்டார். ஆனால் அவர் வாழ்க் கையின், கசப்பான, கொடூரமான, அழகற்ற உண்மைகளைக் காணாது கண்களை மூடிக்கொள்ளவில்லை. எதையும் குறைத்துக் கூறவுமில்லை; புறக்கணிக்கவுமில்லை. அவரது எழுத்து, வாசகனை உயர்த்தியது; பெருமைப்படுத்தியது. சாதாரண மக்களின் வாழ்வைப் பற்றி அவர்கள் புரிந்துகொள்ளும் மொழியில் எழுதிய அவர் உண்மையிலேயே மக்களின் எழுத்தாளராக விளங்கினார்.

ஓர் எல்லேக்குட்பட்டிருந்த படித்த வர்க்கத்தினரின் வட்டத்திற்கும் அப்பால் அவரது குரல் ஒளித்தது. சாதாரணக் கல்வியறிவு பெற்றிருந்த மக்களிடையேயும் அவருக்கு வாசகர்கள் இருந்தனர். இந்நோக்கில் பார்க்கும்போது, இடைக்காலக் கவிகளான துளசி தாசர், கபீர் போன்றவர்களின் அமுதவாக்குகள் இந்திய பொது மக்களின் வாழ்விலே விளைவித்த மாயத்தைப் பிரேம்சந்த் நினைவூட்டுகிருர்.

உன்னதமான இலக்கிய மதிப்புடைய நாவல்களை சுமார் பன்னிரண்டுக்கு மேல் அவர் எழுதியுள்ளார். 'சேவாசதன்', 'பிரேமாசிரமம்', 'ரங்கபூமி', 'காயகல்பம்', 'வரதானம்', 'நிர்மலா', 'பிரதிக்ஞா', 'கபன்', 'கர்மபூமி', 'கோதான்'. கிட்டத்தட்ட 250 சிறுகதைகளுக்கு மேல் எழுதியிருக்கிருர். அவற்றில் சில உலக இலக்கியத்திலேயே சிறந்த சிறுகதைகளாகும். பிரேம்சந்தின் மகன் அமிருதராய் 224 கதைகளின் பெயர் பட்டியலைத் தமது 'கலம் கே சிப்பாஹி' என்ற வரலாற்று நூலில், பின் குறிப்பாகத் தந்துள்ளார். இத்தனை விரிவான பட்டியல் மட்டும் நம்மை வியப்பிலாழ்த்துவதில்லை. இப் படைப்புகளின் தரம் நம்மை வியக்கச் செய்கிறது.

பிரேம்சந்திற்குப் பிடித்தமான கதைக்கருவை வரிசைப் படுத்திப் பார்க்கலாம். இக் கருத்துக்கள் அவரது எழுத்தில் மீண்டும், மீண்டும் பல இடங்களில் வருகின்றன :

(1) நகைகள், மற்றும் பகட்டிலுள்ள ஆசை; இதனுல் ஏற்படும் துன்பங்கள், மனவேதனைகள்.
(2) துயரம் மிகுந்த குடியானவனின் அல்லல்கள், அவனது வேதனை.
(3) வகுப்புக் கலவரங்கள், வைதிகப்பற்று, மூடநம்பிக்கை கண்மூடித்தனமான விருப்பு வெறுப்புகள்.
(4) வரதட்சணைப் பழக்கம், திருமண முறைகள்.
(5) இந்திய விதவையின் அவலநிலே.
(6) மாற்ருந்தாய்.
(7) தேசீய இயக்கங்கள், தேசீய எழுச்சி
(8) சரித்திரத்திலுள்ள ஈடுபாடு, இடைக்கால சரித்திரம், பிற்கால இந்திய சரித்திரம்.
(9) மனிதசக்திக்கு மேற்பட்ட அற்புதங்களில் ஈடுபாடு, அதை இடையிலே புகுத்துவது.
(10) தேசாவேச உணர்வுமிக்க கதை அம்சம், நாட்டுப்பற்று.
(11) கில்லிதண்டு, கபடி போன்ற விளையாட்டுகள்.
(12) நையாண்டி, கிண்டல், போலித்தனத்தை, பாசாங்கைச் சாடும் தீவிரம்.

(13) சமூக அநீதிகள், அக்கிரமங்களை வன்மையாகக் கண்டித்தல்.

(14) சமூகத்தின் யதார்த்தப் போக்கினால் பாதிக்கப்பட்டு, முற்றிலும் மாறிவிடும் பாத்திரப் படைப்புகள்.

சமூக அரசியல் நாவல்களை, இந்தியில் முதன் முதலாக உருவாக்கியவர் பிரேம்சந்தேயாவார். சரத்சந்திரர், தாகூர் ஆகியவர்களின் படைப்புக்களை விட இவரது நாவல்களில் அரசியல் வாடை அதிகம். வங்க நாவல்களில் பெண்மையின் சாயல் அதிகம் படிந்திருப்பதாக பிரேம்சந்த் குற்றம் சாட்டினார். இதுபற்றி தமக்கும், பிரேம்சந்திற்கும் நடைபெற்ற உரையாடலை ஜைனேந்திரர் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார் :—

'வங்க மொழி இலக்கியம் இதயத்தைத் தொடும்படியாக இருக்கிறது. இதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா? இதற்குக் காரணமென்ன?' என நான் வினவினேன்.

'இதை நான் கட்டாயம் ஒப்புக்கொள்கிறேன். உணர்வில் பெண்மை அதிகம் தோய்ந்திருப்பதுதான் இதன் காரணம். என் எழுத்தில் இது போதிய அளவில் இல்லை'—என பதிலளித்தார் பிரேம்சந்த்.

இதைக் கேட்ட நான் அவரை உற்று நோக்கினேன். பின்னர் 'பெண்மை உணர்வு மிகுந்திருப்பதால்தான் அது நம் நெஞ்சைத் தொடுகிறதா?' என்றேன்.

'ஆம்' என்றார் அவர். 'இது பெரும்பாலும் நினைவுகளைக் கிளர்ந்தெழச் செய்வதாக உள்ளது. நினைவுகளில் உணர்வுகளின் நெகிழ்ச்சி அதிகம். ஆய்ந்தறியும் போதோ, உணர்வில் ஒருவித கடினத்தன்மை வந்துவிடும். படைப்பிற்கு இவ்விரண்டுமே தேவை' என்று கூறியவர், தொடர்ந்து 'ஜைனேந்திரா! எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை. நான் ஒரு வங்காளி அல்ல. வங்காளிகள் உணர்ச்சிவயப்படுபவர்கள். உணர்ச்சிகள் இட்டுச் செல்லும் தூரத்திற்கு என்னால் உன்னை அழைத்துச் செல்ல முடியாது. அறிவுபூர்வமாக நீ அடையமுடியாத இடத்தைக்கூட, உணர்ச்சிபூர்வமாக நீ அடைந்துவிட முடியும். ஆனால் ஜைனேந்திரா! நமக்குக் கடினமான தன்மையும் தேவையென எனக்குத் தோன்றுகிறது' எனக் கூறிய பிரேம்சந்தின் முகம் இளம் பெண்ணின் முகம்போல் சிவந்துவிட்டது. 'ஜைனேந்திரா! ரவீந்திரரும், சரத்சந்திரரும் — மகத்தானவர்கள். ஆனால் இந்திக்கு உகந்த பாதையா இது? என்னைப் பொறுத்தவரையில், இது என் பாதை அல்ல' என்றார்.

பிரேம்சந்தின் நோக்கில் கவிதையுமிருந்தது. வசந்தத்தின் வருகை, கிராமப்புறங்களை எப்படி அடியோடு மாற்றிவிடுகிறது

என்பதை அவர் காண்கிருர். கணப்புத் தீயைச் சுற்றி அமர்ந்து. தங்களது அன்ருடத் துன்பங்களைப் பற்றி பேசிக்கொண்டிருக்கும் கிராமவாசிகளிடம், அவர் அழகைக் கண்டார். தூய்மையான, மனித உள்ளத்தின் உருவிலே அவர் அழகை தரிசித்தப்போதிலும், சமுதாய நீதி, விடுதலை, எது சரி, எது தவறு என்ற பிரச்சினை களில், அவர் தம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக்கொண்டிருந்தார். அவரது இயல்பிலே மென்மையும் அமைதியும் இணைந்து விளங்கிய மிருதுத் தன்மை இருந்தது. ஆனால் எழுத்துக்களோ, சமுதா யத்தின் அநீதிக்கும், கொடுமைகளுக்கும் எதிராகத் தொடுத்த கூர்மையான அம்புகளாக, கணைகளாகவே இருந்தன.

வாசகர்களின் ஆவலைத் தூண்டிவிடும் நல்ல கதைகளை பிரேம்சந்த் எழுதினர். அவரது நாவல்களின் சுவாரஸ்யமான கதை அம்சம், வாசகர்களை கவர்ந்துவிடுகிறது. ஆனால் 'திலிஸ்ம ஹோஷ்ருபா' போன்றவைகளை அவர் படித்திருந்ததின் பாதிப்பு, ஓரளவு அவரது நாவல்களுக்கு, விருவிருப்பையும், உணர்ச்சியின் உச்சகட்டத்திற்குக் கொண்டு செல்லும் பரவசத்தையும் ஊட்டி யுள்ளது, என்பதை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். சாவுகள், தற்கொலைகள், அற்புதங்கள், எதிர்பாராத சம்பவங்கள், இப்படி பல அவர் படைத்த உலகில் நடைபெறுகின்றன. ரங்கபூமியில் புரட்சிக்காரர்களிடம் சிக்கும் சோபி காவலில் வைக்கப்படுகிருள். துப்பாக்கிச் சண்டைகள் நடக்கின்றன. மயிர்க் கூச்செறியும் சம்பவங்களும் இதில் உண்டு. முடிவில் சோபி நம்பமுடியாத முறையில் விநயனை ஓர் இரயில்வே நிலையத்தில் சந்திக்கிருள் இருவரும் ஒன்று சேருகின்றனர். காயகல்பத்தில் ரைடர் ஹாக் கார்டினின் 'ஷி' (அவள்) என்ற நாவலை நினைவூட்டும்படியாக இளமையுடன் அழகும் கொண்ட ஒரு ராணியின் பாத்திரம் வருகிறது. இப்படிப் பல உதாரணங்களைக் கூறலாம்.

கிண்டல், கேலிச் சித்திரங்களை ஆழமாக, அழுத்தமாகத் தீட்டுவதிலும் அவர் வல்லவராக இருந்தார். தம்முன்னே பொங்கி யெழுந்த வேகத்தில் எழுதிக்கொண்டே போகும் அவர், நடை முறை உலகின் நியதிகள், கட்டுப்பாடுகள் யாவற்றையும் புறக் கணித்து விடுகிருர். காயகல்பத்தில் மனோரமா, முன்ஷி வஜ்ஜிர தருடைய இல்லத்திற்குச் செல்லும்போது விசித்திரமான நம்ப முடியாத சம்பவங்கள் நிகழுகின்றன. முன்ஷி வஜ்ஜிரதர் உணர்ச்சி பரவசமாகித் தடுக்கிவிழுவார். விளக்குகள் அணையும். வீட்டில் மையிருட்டு பரவி நிற்கும். இப்படிப் பல.

இன்றைய யுகத்தின் நாவல்களிலே சம்பவங்கள் மெதுவாகத் தன் போக்கில் இயல்பாக நிகழ்கின்றன; அதிகப்படியாக ஏதும் நிகழ்ந்துவிடுவதில்லை, ஒருவன் சாப்பிடுகிருன்; உலாவச் செல்லு கிருன்; பாதைகளில் பாதசாரிகள், வாகனங்கள், வெள்ளமாக

வடிவதைக் காண்கிறான்—அர்த்தமற்ற சிந்தனையில் தன்னைக் குழப்பிக் கொள்கிறான்; பார்த்துக்கொண்டே நிற்கிறான். நமது இந்தியச் சமுதாயம், பல விஷயங்களில் இன்னும் பிற்போக்கான நிலையில்தான் இருந்து வருகிறது. இங்கு சம்பவங்கள் துரிதமாகவும், நாடக பாணியிலும் இயங்குகின்றன. பெரும்பான்மையான நாகரிகச் சமுதாயங்களில் இவ் வேகம் குறைவாகத்தானிருக்கிறது. இங்கு சிகரெட்டின் மணமும், குடிவகைகளைப் பற்றிய உரையாடலுமே, பரபரப்பு மிகுந்த உணர்ச்சியின் எல்லையை எட்டிவிடப் போதுமானவை.

எழுத்தாளர் என்ற முறையில் பிரேம்சந்தின் பெருமை அவரது படைப்பாற்றலில்தான் அடங்கியுள்ளது. அவர், வாழ்க்கையை மிகப் பரவலாக, சகலவிதமான கோணங்களிலும் கண்டு, அதைச் சித்திரித்து, தாம் படைத்த பாத்திரங்களை அவ்வுலகில் உலாவவிட்டு இருக்கிறார். பிரேம்சந்த் படைத்த இவ்வுலகில், குடியானவர்கள், நிலச்சுவான்தார்கள், லேவாதேவிக்காரர்கள், தொழிலதிபர்கள், துணிகரமாகச் செயலாற்றுபவர்கள், உண்மைக்கும் நியாயத்திற்கும் போராடுபவர்கள், தூய உயரிய தன்மை கொண்ட கதாநாயகர்கள், நல்லவர்கள், கெட்டவர்கள், நளினமான மெல்லியல்பு கொண்டவர்கள், கடுமை நிறைந்த சண்டைக்கார கிழவிகள்......என நூற்றுக்கணக்கான பேர்கள், உலவுகின்றனர். எண்ணற்ற பாத்திரப் படைப்புகளிலே, சுமன், பிரேம்சங்கர், சூர்தாஸ், சமர்காந்த், ஹோரி, சோபி, விநயன், போன்ற பலர் இலக்கிய வரலாற்றில் தலைநிமிர்ந்து நிற்கின்றனர். பாத்திரங்கள், உயிரோடிருக்கும் மனிதர்களைவிட, உண்மையானவர்களாக, நெருங்கியவர்களாகத் தோன்றுகின்றனர்.

நிலவுடமையாளர்களுக்கு எதிராகக் குடியானவனும், வைதீகக் கட்டுப்பாட்டை எதிர்க்கும் விதவையும், பூசாரிக்கு எதிராக தீண்டத் தகாதவனும் போராடுவதைக் காட்டுவதன் மூலம், சமுதாய அநீதிகளை எதிர்த்து, இதற்கெல்லாம் ஒரு தீர்வைக் காணத் துடிக்கும் இந்தியாவை, பிரேம்சந்த் இவ்வாறு தமது எழுத்துக்களின் மூலம் நம்முன்னே கொணர்ந்து நிறுத்துகிறார். புரட்சிகரமான உத்வேகத்தில் அவர் இந்தியாவின் உண்மை நிலையை மாற்றி அமைத்துவிடுகிறார். வாயற்ற ஊமைப் பிராணிகளின், மந்தைக் கூட்டத்தின், சித்திரமல்ல இது. கோடிக்கணக்கானவர்கள் வெற்றியை நோக்கி நடைபோடும் காட்சி இது.

ஏராளமான சிறுகதைகளை அவர் எழுதினார். அவரது நாவல்களில் விரவி நிற்கும், இதே சமுதாயக் கண்ணோட்டத்தைக் கதைகளிலும் காண்கிறோம். தூய்மையும், வாய்மையும் ஒருங்கே பெற்ற மனிதர்கள், பெண்கள், அவரவர் வாழ்க்கையின் எல்லைக்

கோட்டிற்குள் செயலாற்றுவதையும், உயர்ந்து நிற்பதையும் காட்டும் உண்மையான சமூக சித்திரங்களை நாம் காணமுடிகிறது. பஞ்சபரமேஸ்வர், கடவுளின் நியாயம் (ஈச்வரி நியாய்), உப்பு வரி இன்ஸ்பெக்டர் (நமக் கா தாரோக), பிரேம்சந்திற்குப் பிடித்தமான பெரிய இடத்துப் பெண் (படே கர் கீ பேடி), முதலியவை இத்தகைய பெருமைப்படத்தக்க படைப்புகளாகும். 'கிழச்சித்தி' (பூடி காகி), காசாகி (தபால்காரன் ஒருவனின் பெயர்), ஆத்மாராம் (ஒரு கதாபாத்திரம்) ஈத்காஹ் கதையில் வரும் ஒரு பாட்டி...போன்ற அற்புதமான படைப்புகள், நினைவை விட்டு நீங்காத, உயிர்த் துடிப்புடன் கூடியவை. சரித்திரப் பின்னணியிலே புனையப்பட்ட மன்னிப்பு (க்ஷமா), ராணி சாரந்தா, ராஜா ஹர்தயால் போன்ற சிறந்த கதைகளும் உள்ளன. 'தை மாதத்து இரவு' (பூச் கி ராத்), ஒன்றேகால் சேர் கோதுமை (சவா சேர் கேஹூம்), தாகுரின் கிணறு (தாகுர் கா குவாம்), முக்திதான் நற்கதி (சத்கதி) போன்ற கதைகளில் தேசாவேச உணர்வு மிளிர்கின்றது. 'குண்டு ராம் சாஸ்திரி' (மோடேராம் சாஸ்திரி) போன்ற கிண்டல் சித்திரங்களும் இல்லாமலில்லை. பிரேம்சந்தின் சிறுகதைகளில் இந்திய வாழ்வின் காட்சிகள் அனைத்தும், உள்ளார்ந்த சோகத்தின் கனத்துடன், உணர்ச்சி மிக்கதாய், தெளிவும், வலுவுமிக்க சொற்களால் எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

இக் கதைகளில் பல்வேறு விஷயங்கள் வருகின்றன. பிளவு பட்ட குடும்பங்கள், பாட்டியிடம் பாசம்கொண்ட சிறுவன், மாமனுர் வீட்டில் அவமதிப்புடன் வாழும் மருமகன், கில்லிதண்டு விளையாட்டு, ஒரு நல்ல கிராமியப் பெண், அபவாதம் செய்வதையே தொழிலாகக் கொண்ட பொல்லாத கிழவி என்ற பலரை நாம் சந்திக்கின்றோம். ஹீரா, மோதி எனும் இரு காளைமாடுகளின் கதை, மூடநம்பிக்கைகள், குருட்டுத்தனமான எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட பல கதைகள் உள்ளன. மறைந்துவரும் கடந்தகால யுகத்தின் நிழலைச் சித்தரிக்கும் 'சதுரங்க ஆட்டக்காரன்' (சத்ரஞ்ச் கே கிலாடி) கதையை நாம் காண்கிறோம். தனது பின்தங்கிய நிலையிலும், இத்தகைய அநியாயங்களையும், தீமைகளையும் எதிர்த்துப் போராடி, களைந் தெறிய முற்பட்ட இந்தியாவின் ஆன்மாவை, இக் கதைகள் மிக மிக அண்மையிலிருந்து காணும் வாய்ப்பை அளிக்கின்றன.

பிரேம்சந்த் தமது சிறுகதைகள் பலவற்றில் மனிதனின் அகம்பாவ ஆணவத்திற்கும், உயரிய பண்புகளுக்குமிடையே நடக்கும் மனப் போராட்டத்தை விவரித்திருக்கின்றார். பெரும் பாலும் உயர்ந்த பண்புகள் தாம் வெற்றிபெறும். உள்ளது உள்ளபடி சித்திரிப்பதில் பிரேம்சந்த் இணையற்று விளங்குகிறு

றென்றாலும் அவரது இலட்சிய வாத நோக்கானது ஒரு பாதையை வலிந்துகாட்ட முற்படாமல் இருக்காது. தமது கதைகளில் அவருக்கு மிகவும் பிடித்தமானது 'பெரிய இடத்துப் பெண்'தான்.

லாகூர் பத்திரிகை அவரது எழுத்தைப்பற்றிக் கேட்டிருந்த ஒரு கேள்விக்கு அவர் இவ்வாறு பதில் எழுதியுள்ளார் :—'என் கதைகள் பெரும்பாலும் ஏதோ ஓர் உணர்வின் தூண்டுதல், அல்லது அநுபவத்தினால்தான் பிறந்தவைகளாகும். இவற்றினூடே நான் நாடகத்தன்மையை புகுத்தியுள்ளேன். ஆனால் குறிப்பிட்ட ஒரு சம்பவத்தைச் சித்திரிக்க வேண்டுமென்பதற்காக நான் கதைகள் எழுதியதில்லை. கதைகளில் ஏதாவது ஓர் உணர்ச்சியை, தத்துவ உண்மையை வெளிப்படுத்த நான் ஆசைப்படுகிறேன். இதற்கு ஆதாரமான ஒரு பற்றுக்கோல், அடித்தளம் கிடைக்காதவரை என் பேனா நகராது.'

விநோத சங்கர் வியாஸின் சிறுகதைத் தொகுதியான 'மதுகரி'யைப் பற்றி அவருக்கு எழுதுகையில் பிரேம்சந்த், இலக்கியத்தின் இலட்சியங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்—'என் கருத்து, மற்றயாவரின் கருத்துப்படி—இலக்கியத்திற்கு மூன்று குறிக்கோள்கள் உண்டு—வளர்ச்சி, இன்ப அனுபவம், வெளிப்பாடு. (அதாவது வெளியிடும் முறை). விஷயம் எம்முறையில் தரப்பட்டுள்ளது என்பதும், இலக்கியத்தால் ஏற்படும் இன்ப அநுபவமும், வளர்ச்சிக்கு உள்ளடங்கியவை. விதுஷகன் அல்லது கூத்தாடி அளிக்கும் இன்ப அநுபவத்திலிருந்து படைப்பிலக்கிய கர்த்தா அளிக்கும் இன்ப அநுபவம் வேறுபட்டதாகும். இது வளர்ச்சியை ஒட்டியெழும் எண்ணமாகும். எதையும் விவரிக்கப் புகும்போதுகூட, அதை உயர்வுறச் செய்வதைத் தனது நோக்கமாகக் கொண்டிருக்கும்!'

விநோத சங்கர் வியாஸிற்கு எழுதியுள்ள மற்றொரு கடிதத்தில் பிரேம்சந்த் குறிப்பிடுகிறார் :—'கதைக்கு வேண்டிய கருப்பொருளை வாழ்க்கையிலிருந்து எடுத்துக்கொள்ள வேண்டும். அவை வாழ்க்கைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதாய் அமைக்கப்பட வேண்டும். கவிதையில் சொல்ல வேண்டியதை, கதை மூலமாக வெளிப்படுத்துவதை நான் விரும்பவில்லை. கதையைவிட வசன கவிதை இதயத்தின் நரம்புகளைத் தொட்டசைக்கும் சக்தி வாய்ந்தது. ஏனெனில் அது அந்த நோக்குடனேயே இயற்றப்பட்டுள்ளது. ஆனால் இசையின் இனிய நாதம் காதிலே வந்து மோதி, அலையெழுப்பி லேசான சலனத்தை ஏற்படுத்தியபின் கரைந்துவிடுகிறது. கதையோ, நம் முன்னே, உயிர்த்துடிப்புடன் கூடிய கதாபாத்திரங்களைக் கொணர்ந்து நிறுத்துகின்றது.'

# 13

நகரங்கள், கிராமங்கள், வயல்கள், பசும்புல் வெளிகள், பெரும் சாலைகள் குறுகிய சந்துகள், இடிந்த குடிசைகள் இவற்றில் வாழ்ந்து கொண்டிருந்த இந்தியாவை, ஜீவனுள்ள உண்மைச் சித்திரமாகப் படைத்துக் காட்டியதிலும், வாழ்க்கையை யொட்டி, அதனோடு இணைந்து சென்றதிலும் தான் பிரேம்சந்தின் படைப் பாற்றல் திறன் முழுவதும் அடங்கியுள்ளது. தமது பேனு வன்மையினுல், தாம் கண்ட இந்த வாழ்க்கையையே மாற்றிவிட வேண்டுமென அவர் ஆசைப்பட்டார். அவரது வாசகர்களின் சிந்தனைசக்தி, அவரது எழுத்தின் பாதிப்பிற்கு பெரிதும் உள்ளாகி யிருந்தது.

புரட்சிக் கருத்துடைய சிந்தனையாளரான பிரேம்சந்த் தவறு களையும், அநீதிகளையும், அது எந்த உருவெடுத்துப் பரந்து நின்ருலும், தயங்காது கண்டித்தார். அரசாங்க ஊழியராகப் பணியாற்றிய நிலையிலும், அன்னிய ஆதிக்கத்தினுல் ஏற்பட்டுள்ள இழிவைத் துணிவுடன், அஞ்சாது எடுத்துரைத்தார். பாட்டாளி யையும், விவசாயியையும் அவர் ஆதரித்தார். பூசாரிக்கு எதிராக, தீண்டத்தகாதவனுக்குப் பக்கபலமாக நின்ற அவர் சமூகக் கொடுமைகளுக்குப் பலியான பெண்ணிற்கு உறுதுணையாகி நின்ருர். கொடுமைகளை—அது எவ்வுருவில், எத்தோற்றத்தி லிருந்தாலும், அடியோடு வெறுத்தொதுக்கினுர்.

பிரேம்சந்த் தெளிந்த நோக்குடையே ஒரு முற்போக்குவாதி. வைதீகச் சம்பிரதாயம் குருட்டுத்தனமான நம்பிக்கை, மூட எண்ணங்களைக் கடுமையாகத் தாக்கினுர். வைதிகச் சம்பிரதாயத் திற்கும், பழமைக் கருத்துக்களுக்கும் அடிமைப் பட்டுப் போனவர் களுக்கு, அவர் சம்பிரதரயத்தைத் தகர்த்தெறிபவராகக் காட்சி யளித்தார். பழமைவாதிகளின் வெறுப்பிற்கும், கண்டனத்திற்கும் அவர் ஆளானுர். அவர்கள் இடைவிடாது அவரைத் தாக்கி வந்தனர். அவரும் சலியாது, முழு வேகத்துடன் பதிலடி கொடுத்துக் கொண்டேயிருந்தார்.

காந்தீயத்தின் செல்வாக்கிற்குட்பட்டிருந்த அவர் கோக லேயின் கருத்துக்களை விட்டகன்று, இன்னும் தீவிரமானதொரு குறிக்கோளை நோக்கி, முன்னேறினுர். தாம் வகுத்துக்கொண் டுள்ள பாதை சமதர்மக் கோட்பாடுகளை நெருங்கி வந்துகொண் டிருக்கிறது என்பதை அவர் உறுதியாக உணர்ந்துகொண் டிருந்தார். நிகமிற்கு எழுதியுள்ள கடிதத்தில், 'நான் கிட்டத்

தட்ட போல்ஷிவிக் கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டுவிட்டேன்' என்பதைத் தெளிவாக அறிவித்துள்ளார். இரக்கமற்ற தன்மையையும், கொடுமையையும், வயலிலோ, தொழிற்சாலையிலோ எங்கிருந்தாலும் சிறிதும் ஆதரிக்காத பிரேம்சந்த், 'நசுக்கப்பட்டு, தாழ்த்தப்பட்டிருக்கும் மக்களுக்கு அரசியலைப் போதிப்பதைத் தமது இலட்சியமாகக் கொண்டு உருவாகப் போகும் ஒரு கட்சியைச் சேர்ந்தவன் நான்', என அறிவித்துள்ளார்.

நாட்டின் சுதந்திரத்தைப் பற்றி சிவராணி தேவியிடம் பேசிக் கொண்டிருந்த போது, சிவராணி கேட்டார்—'சுதந்திரம் கிடைத்தபின் இச் சுரண்டல் இருக்காது அல்லவா?'

'எங்கும், எல்லா இடத்திலும் இது ஒருவிதத்தில் இருந்து கொண்டுதானிருக்கிறது. வலிமையுள்ளவன் வலிமையற்றவனை நசுக்குவதுதான் வாழ்க்கையின் முறை போலும்! ஆனால் இரஷ்ய நாட்டிலே பெரும் செல்வரை ஒரு மட்டத்திற்குக் குறைத்து, ஒரே சீரான சமுதாயத்திலே ஏழைகள் இன்பமாக வாழ்கின்றனர். இங்கும் அதுபோல் ஏதாவது ஏற்படலாம்' என்றார் பிரேம்சந்த்.

பனாரசிதாஸ் சதுர்வேதிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் தமது உள்ளக்கிடக்கையை அவர் இவ்வாறு வெளியிடுகிறார்:—'எனக்கு எவ்விதமான ஆசையும் இல்லை. இப்பொழுது எனக்கிருக்கும் ஒரே ஒரு மாபெரும் ஆசை, சுதந்திரத்திற்காக நாம் நடத்தப் போகும் போராட்டத்தில் வெற்றிபெற வேண்டுமென்பதுதான். புகழ், பணம், இவற்றை அடையவேண்டும் என நான் திட்டம் தீட்டவில்லை. சாப்பாட்டிற்குப் போதுமானது கிடைக்கிறது. காரோ, பங்களாவோ வேண்டுமென்று ஆசையில்லை. இலக்கிய மதிப்புள்ள நூல்கள் ஒன்றிரண்டாவது எழுதிவிடவேண்டும் என்ற ஆசையிருக்கிறது. ஆனால் அவற்றின் குறிக்கோளும் தேச விடுதலைதான். அமைதியாக வாழ நான் ஆசைப்படவில்லை. இலக்கியத்திற்கோ, நாட்டிற்கோ, ஏதேனும் செய்துகொண்டே இருக்கவேண்டுமென ஆசைப்படுகிறேன்.'

இந்திரநாத் மதானுக்கு எழுதியுள்ள கடிதமொன்றில் தமது அடிப்படையான நம்பிக்கைகளைக் குறித்து எழுதிய அவர் இவ்வுலகத்தின் நல்ல தன்மையிலும், இரக்கச் சிந்தையிலும் தமக்குள்ள நம்பிக்கையின்மையை வெளியிட்டுள்ளார். அவர் எழுதுகிறார்:—'எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டதொரு சர்வவல்லமையுள்ள சக்தியின் மீது முன்னர் எனக்கு நம்பிக்கை இருந்தது. இந்த நம்பிக்கை, சிந்தனையின் முடிவினால் விளைந்தது அல்ல; பரம்பரையாக இருந்துவரும் பழக்கத்தினால் ஏற்பட்டது. அந் நம்பிக்கை இப்பொழுது சிதறுண்டுவிட்டது. இவ்வுலகத்திற்கும் அப்பால் ஏதோ ஒரு மாபெரும் சக்தி இருக்கிறதென்பதில் சந்தேகமில்லை. ஆனால், அதற்கும் இம் மனித குலத்தின் காரணகாரியங்

களுக்கும் சம்பந்தமுண்டு என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஈ, எறும்பு, கொசுக்களின் காரியகாரணத்துடன் எப்படி அதற்குத் தொடர்பில்லையோ, அதுவேபோல் தான் இதுவும்.'

ஜைனேந்திரருக்கு அவர் எழுதினர்—'அறிவாற்றல் நிறைந்த விஷயங்களைப் படிப்பதிலும், கேட்பதிலும் என் வாழ்க்கை கழிந்து விட்டது. எனக்குக் கடவுளிடம் நம்பிக்கை இல்லை; மதிப்பும் இல்லை. நீ நம்பிக்கையை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிருய். நானே, தொன்றுதொட்டுவரும் எண்ணங்களில் நம்பிக்கை யில்லாதவனுக, நாஸ்திக வாதத்தை நோக்கிச் செல்கிறேன்.'

தமது கதையில் ஒரு பாத்திரத்தை இவ்வாறு பேசவைத்திருக் கிருர்.—'கடவுளைவிட இரக்கமற்றவன் இவ்வுலகில் வேறு யாரு மில்லை. தான் ஆட்டுவிக்கும் சூத்திரப்பாவைகளை, அவர்களது தவறுகளுக்காகவும், முட்டாள்தனத்திற்காகவும் தண்டித்து, நரகத்தின் நெருப்புக் குழியில் தள்ளிவிடும் கடவுள் இரக்கம் உள்ளவனுகவே இருக்கமுடியாது. இரக்கம் காட்டுவதைவிட பல ஆயிரம் மடங்கு கொடுமை காட்டுபவன் கடவுள். இத்தகைய தொரு கடவுளைப் பற்றிய கற்பனையையே நான் வெறுக்கிறேன்.'

உலகம், வாழ்க்கை, இவ்விரண்டையும் பற்றிய பிரேம்சந்தின் அடிப்படைக் கருத்துகள் இவை. அவரது கலைக்கு அடித்தளமாய் அமைந்துள்ள கருத்துக்களும் இவைதான். இந்த உறுதியான அஸ்திவாரத்தின் மீது தான் வாசகர்களிடையே பெரும் செல் வாக்குப் பெற்றிருந்த படைப்புகள் தலை நிமிர்ந்து நிற்கின்றன. அவரது ஆவேசமிக்க கருத்துகள்தான் அவரது எழுத்தைப் பின்னு லிருந்து ஊக்குவித்த உத்வேகமாய் விளங்கின. இந் நோக்கில் பார்க்கும்போது பிரேம்சந்தை கார்க்கியுடன் ஒப்பிட முடிகிறது. பிரேம்சந்தும் கார்க்கியைப் போலவே எளிய சாதாரண மக்களின் எழுத்தாளராக விளங்கினுர். கார்க்கியைப் போலவே அவரது மகத்தான வலிமை, சாதாரண, எளிய மக்களின் வாழ்வை, தமது கலை என்னும் வலிமை வாய்ந்த சாதனத்தின் மூலம் மாற்றிவிட வேண்டுமெனப் பேரவா கொண்டிருந்ததில்தான் அடங்கி யிருந்தது. இதனுல் தான் அழகைவிட, உறுதியும், வன்மையும், அவரது எழுத்துகளில் மேலிட்டு நிற்கின்றது. பெண்மையின் நளினமும், இனிமையும், மென்மையும் கலந்த கவிதைத் தன்மை யைவிட ஆண்மையின் கம்பீரமான இயல்புகளை அவரது எழுத்தில் அதிகமாகக் காணமுடிகிறது.

நடைமுறை உலகிற்கப்பாற்பட்ட மறு உலகத்தைப் பற்றிய சில விஷயங்கள் அவரது எழுத்துகளில் எங்கேனும் ஒரு சில இடங் களில் காணப்படுகின்றன. 'மரணம்' (மவுத்) 'நாகபூஜா', 'மந்திரம்', 'காயகல்பத்'தின் ஒரு சில பகுதிகள் இக்கூற்றிற்கு ஆதாரமாய் நிற்கின்றன. ஆனுல் இத்தகைய பாதிப்புகளை உதறி

எறிந்துவிட்டு, பிரேம்சந்த், தமது பிற்காலப் படைப்புகளில் முழு மூச்சுடன் இயங்கும் முற்போக்குப் படைப்பிலக்கிய கர்த்தாவாகத் தோன்றுகிருர். அசைக்கமுடியாத உறுதியும், தம் கொள்கை களிலே ஆழ்ந்த பிடிப்பும், பற்றும் கொண்டிருந்தவராக இருந்த தால் பயனற்ற சிந்தனைகளும், அர்த்தமற்ற கருத்துக்களும், அவரைத் தவருன பாதையில் இட்டுச் செல்ல, தடம் புரண்டு, திசைமாற்றி இழுத்துச் செல்ல வகையற்றிருந்தன.

பெரும்பாலான வாசகப் பெருமக்களை அணுகவேண்டும் என்ற ஆசைகொண்டிருந்த அவர் இந்தி அல்லது உருதுவை ஒரு சில மாறுதல்களுடன் சரளமான எளிய, ஆனல் சக்திவாய்ந்த, பொருளாழமுள்ள, ஒரு மொழி நடையை உருவாக்கிக்கொண்டார். தங்குதடையறியாது தன்னிச்சையாகப் பெருகிவரும் ஆற்றெழுக் கான நடை அது. பிரேம்சந்த் சொல்லின் அருமை தெரிந்தவர்; அளவறிந்து அதை உபயோகித்தார். அவரது கலையின் ஏனைய தன்மைகளைப் போல, அவரது நடையும் தனது அலங்காரச் சிறப்பிற்காக அன்றி, ஜீவன் ததும்பும் சக்திவாய்ந்த தன்மைக்காக பாராட்டப்படத் தக்கதாகும்.

இந்தியாவின் இருபெரும் சமூகத்தினர் நெருங்கி, இணைந்து வாழவேண்டுமென ஆசைபட்ட பிரேம்சந்த் இந்தியும், உருதுவும் ஒன்ருேடொன்று இணைந்து உறவாட வேண்டுமென விரும்பினர். இஸ்லாம் மதத்தினரில் உயர்ந்த பெருமக்களை அவர் கண்டார். அவரது அந்திம காலத்தில் முசல்மானெருவரின் அன்பு கனிந்த ஆதரவான கவனிப்பை, அவர் பெற்றிருந்தார். ‘மன்னிப்பு’ (க்ஷமா) என்ற அவரது சிறந்த சிறுகதையொன்றில் முஸல்மான் ஒருவன், தன் மகனைக் கொன்ற கிருத்துவனெருவனைத் தன் இனத்தாரின் சீற்றத்திலிருந்து காப்பாற்றுகிருன். மதச் சார்பற்ற சமுதாயம் என்ற சொல் வழக்கிலே அடிபடுவதற்கு வெகுநாள் முன்னரே, பிரேம்சந்த் அத்தகையதொரு மதச் சார்பற்ற சமுதா யத்தில், உண்மையான, சத்யவேட்கையுடன் கூடிய, நம்பிக்கை கொண்டவராக இருந்தார்.

## 14

படைப்பிலக்கியகர்த்தா என்ற முறையில் பிரேம்சந்த் தாம் காலமாவதற்கு முன் எழுதிய ‘லேவாதேவி நாகரிகம்’ (மகாஜனி சப்யதா) என்ற கட்டுரையையும், முற்றுப்பெருத நாவலான மங்களசூத்திரத்தையும், அவரது உயில் அல்லது சாசனமாகக் கொள்ளலாம். தட்டுத்தடுமாறி நடக்கும் அவரது வாரிசுகளான

நாம் அவரது கடைசி எழுத்துக்களில் நம்மை வழிநடத்திச் செல்லும் ஒளிவிளக்கைக் காணலாம்.

'மகாஜனி சப்யதா' என்ற தமது கட்டுரையில் தற்கால சமுதாயத்தில் பரவலாக விரவிநிற்கும் தீமைகளுக்கெல்லாம், லாப நோக்குதான் காரணம் என்று குற்றம் சாட்டுகிருர். அவர் எழுதுகிருர்—'இந்த 'முதலாளித்துவப் பண்பாட்டு நாகரிகத்தில் பணம் எல்லாவிதமான செயற்பாட்டிற்கும் ஒரே குறிக்கோளாகத் துலங்குகிறது. முதலாளிகளும், பாங்குக்காரர்களும் அதிகபட்ச மான இலாபத்தை அடையக்கூடும் என்ற நோக்கத்துடன் ஒரு நாடு ஆளப்படுகிறது. இக் குறிக்கோளுடன் தான் இன்று உலகம் (bankers) பாங்கர்களால் ஆளப்படுகிறது. மனித சமுதாயம் இரு பகுதிகளாகப் பிளவுபடுத்தப்பட்டிருக்கிறது. பெரும்பான்மையினர் நிறைந்த ஒரு பகுதி உழைப்பாளிகள், பாட்டாளிகளுடையது. மற்ருெரு சிறுபகுதி தனது அதிகாரம் மற்றும் செல்வாக்கினுல் பெரும்பகுதியனரை, தனக்கடிமையாக்கிக் கொண்டுள்ளது. இப் பெரும்பகுதியினரின்பால் இவர்களுக்கு அநுதாபமோ, இரக்கமோ கிடையாது. இப் பெரும்பகுதியோ, தங்களுடைய எஜமானர் களுக்காகவே உயிர் வாழ்கின்றது. அவர்களுக்காகவே தங்களது குருதியைப் பெருக்கி, வியர்வையைச் சிந்தியவண்ணம் என்ருே ஒருநாள் மௌனமாக இவ்வுலகைவிட்டுப் பிரிந்து விடுவதற் காகவே உயிர் வாழ்கின்றது.'

வெகுதூரத்திலுள்ள ஒரு நாட்டில் உருவாகிய புதியதொரு நாகரிகத்தில் மனிதகுலம் புதிய நம்பிக்கை கொண்டு உயிர்த் தெழுவதை பிரேம்சந்த் கண்டார்.

'தொலேவிலே மேற்குத்திசையில் புதிய நாகரிகமெனும் சூரியன் மேலெழும்பிக் கொண்டிருக்கிருன். முதலாளித்து வத்தையும், வட்டித் தொழிலேயும் இது வேருடன் களைந்து எறிந்து விட்டது. இப் புதிய பண்பாட்டின் அடிப்படைக் கொள்கையானது தனது உடலுழைப்பினுலோ, சிந்தனேயினுலோ, ஏதாவதொன்றை உருவாக்கும் ஒவ்வொரு குடிமகனும், சமுகத்தின் ஓர் அங்கமாகக் கருதப்படுவான், என்பதாகும். பிறரது உழைப்பின் வலிமையின் மூலமோ, தனது மூதாதையர் திரட்டி வைத்துப் போயிருக்கும் செல்வத்தின் பலத்தினுலோ, பிறர் மீது தன் ஆதிக்கத்தைச் செலுத்துபவன் இழித்துரைக்கப்படுகிருன். இத்தகையவர் களுக்குக் குடிமகனின் உரிமைகள் மறுக்கப்படுகின்றன. அரசாங் கத்தின் விஷயங்களேப் பற்றித் தங்களது கருத்துக்களே வெளியிட அருகதை அற்றவர்களாக அவர்கள் கருதப்படுகின்றனர். இப் புதிய எழுச்சியைக் கண்டு சீற்றங்கொண்ட முதலாளி, உலகத்தி லுள்ள முதலாளிகளுடன் சேர்ந்து இதைச் சபிக்கிருன்...... நிந்திக்கிருன்.'

பிரேம்சந்த் தமது வாழ்க்கையில் ஏழ்மையைக் கண்டிருக்கிருர். செல்வச் செழிப்பின் சுகபோகங்களுக்கு அவர் ஆசைப்படவில்லை. செல்வத்தை நாடி புறப்பட்ட ஒரு போர்வீரர் அவர். ஆனுல் அவர் நாடிச்சென்றது பொருட்செல்வமல்ல. தோல்வியடைய நேரிடும் எனத் தெரிந்திருந்தும், கொள்கைக்காகவே அவரது பேனு, அவரது கூர்வாள், போராடியது. ராட்சத ஆலைகள், பணக் கோட்டைகள், அபரிமிதமான செல்வத்தைத் தாக்கும் 'டான் குவிக்ஸோட்'டாக அவர் இருந்தார். இலட்சியவாதம் அவரது பலமாகவும், அவரது எழுத்திற்குத் தூண்டுகோலாகவுமிருந்தது. வளராது கரு உருவிலேயே நின்றுவிட்ட அவரது கடைசிப் படைப்பிலே தமது நம்பிக்கையை மீண்டும் வலியுறுத்துகிருர். மங்கள சூத்திரமெனும் இந் நாவலின் கதாநாயகன் ஆசிரியர் பிரேம்சந்த் தான்.

'அவனிடம் மகத்தான ஆற்றலுணர்வு இருந்தது, என்பதை எவரும் மறுக்கமுடியாது. அவனிடம் உதவிகேட்டுப் பெற முடியாமல் போயிற்று என்பதில்லை. இலக்கியப் பணியை விட வேறெதிலும் அவனுக்கு நாட்டமில்லை. இதிலோ பணம் கிடையாது. அவனுக்குப் புகழ் கிட்டியது என்பது உண்மை. இது அவனுக்கு மனநிறைவை, ஆத்மதிருப்தியை அளித்தது. செல்வத்தைத் திரட்டுவதில் அவனுக்கு நம்பிக்கையில்லை. சுயாபிமானத்துடன் அவன் வாழ விரும்பினுன்—அவ்வளவுதான். அவனிடம் நிச்சயமாக ஒருவிதச் செருக்குண்டு. அதை நீங்கள் கர்வமென்று வேண்டுமானுலும் கூறலாம். ஆனுல் அது இலக்கியகர்த்தாக்களுக்கே இயல்பான செருக்கு....'

1880 ஆண்டு, பொது மேடைகளில் துணிகரமான சொற்பொழிவுகள் ஆற்றுவதைவிட நாட்டின் விடுதலைக்கு வேறு எதையும் அவசியமெனக் கருதாத மிதவாதத் தலைவர்கள் நிறைந்த காலமாயிருந்தது. 1936 இந்தியாவின் விதியை நிர்ணயிக்கும் ஆண்டாக இருந்தது. புதிய நம்பிக்கைகள், அபிலாஷைகள் நிறைந்த ஆண்டு அது. இந்தியா தனது இலட்சியமான, சமூக, பொருளாதார, அரசியல் சுதந்திரத்தை நோக்கி அசுரத்தனமான வேகத்துடன் உறுதியாக முன்னேறித் தொடங்கியிருந்தது. இத்திசை நோக்கி முன்னேறிச் செல்ல பிரேம்சந்தின் படைப்புகள் சக்திவாய்ந்த சாதனமாக உதவின. இன்று காணும் இந்தியாவை உருவாக்குவதில் அவரது எழுத்துக்கள் முக்கியமான அம்சங்களாக விளங்கின. புதிய இந்தியாவின் எதிர்காலத்தை உருவாக்க இன்னும் பல பல சக்திகள் இயங்கின. இன்றுள்ள நமது வாழ்க்கையை உருவாக்குவதில் அவரது எழுத்துக்களும், ஒரு மகத்தான சக்தியாக இருந்து உதவின.

## புத்தக விவரம்

1. அமிருத் ராயின் 'கலம் கா ஸிபாஹி'.
2. மதனகோபாலின் 'கலம் கா மஸ்தூர்'.
3. சிவராணி பிரேம்சந்தின் 'பிரேம்சந்த்—கர் மை'.
4. 'ஜீவன்-ஸார் : ஹன்ஸ் : ஆத்மகதங்க்'
5. 'ஹன்ஸ் : ஸ்மிருதி அங்க்'
6. 'பிரேம்சந்த் ஸ்மிருதி'
7. 'சிட்டீ-பத்ரீ' (2 பாகங்கள்)
8. 'விவித் பிரசங்' (3 பாகங்கள்)
9. 'The Works of Prem Chand.'

## நன்றி

அமிருத் ராயின் "கலம் கா ஸிபாஹி", மதன் கோபாலின் "கலம் கா மஸ்தூர்", மற்றும் சிவராணி தேவியின் "பிரேம்சந்த்: கர் மை" என்ற புத்தகங்கள் பிரேம்சந்தின் வாழ்வையும் படைப்புக்களையும் பற்றிய ஆதாரபூர்வமான விவரங்கள் அறிய உதவின என்பதை ஆசிரியரும் பதிப்பாளரும் நன்றியுடன் அறிவிக்கின்றனர்.

# இந்திய இலக்கியச் சிற்பிகள்

தற்காலப் படைப்புக்களிலும் பழம் பெரும் படைப்புக்களிலும் தலை சிறந்த இந்திய இலக்கியச் சிற்பிகளைப் பற்றி அறிவதன்மூலம் இந்திய இலக்கிய வரலாற்றின் முக்கிய கட்டங்களைப் பற்றிச் சாதாரண வாசகன் தெளிந்து உணர இப் புத்தக வரிசை உதவும். ஒவ்வொரு நூலும் ஓர் இந்திய இலக்கியச் சிற்பியின் கதையையும் அவரது படைப்புக்களையும் பற்றி விவரிக்கும். ஒவ்வொன்றும் ஏதேனும் ஓர் இந்திய மொழி இலக்கியத்தின் வளர்ச்சிக்கும் சிறப்புக்கும் அளவற்ற பணிபுரிந்த சிற்பியின் வரலாறு ஆகும்.

இந்த வரிசையில் வெளியான நூல்கள்:
(எல்லாம் ஆங்கிலத்தில் கிடைக்கும்)

**லட்சுமிநாத பெஸ்பருவா**
—ஹேம் பருவா
**ராஜா ராம் மோகன் ராய்**
—ஸௌம்யேந்திரநாத் டாகுர்
**கேசவசுதர்** —பிரபாகர் மாச்வே
**இளங்கோ அடிகள்**—மு. வரதராசன்
**பிரேம் சந்த்**
—பிரகாஷ் சந்திர குப்தா
**ஈஸ்வர சந்திர வித்யாசாகர்**
—ஹிரண்மயீ பானர்ஜி
**கபீர்** —பிரபாகர் மாச்வே
**தோரு தத்** —பத்மினி ஸேன் குப்தா
**வேமனு** —வி. ஆர். நார்லா
**வீரேசலிங்கம்** —வி. ஆர். நார்லா
**காலிப்** —எம். முஜீப்
**மீரா பாய்** —உஷா நில்ஸன்

**சாகித்திய அக்காதெமி**
ரவீந்திர பவன், புது தில்லி-1
ரவீந்திர ஸரோவர் ஸ்டேடியம்
பிளாக் 5 B, கல்கத்தா-29
21, ஹாடோஸ் ரோடு, சென்னை-6

சாகித்திய அக்காதெமி 1954ஆம் ஆண்டு இந்திய அரசால் அமைக்கப்பெற்ற தேசிய இலக்கியக் கழகம். தன்னுரிமைகொண்ட இந்த ஸ்தாபனத்தின் கொள்கைகளை வகுக்கும் பொதுச்சபை, பல இந்திய மொழிகள், ராஜ்யங்கள் மற்றும் பல்கலைக் கழகங்களின் பிரதிநிதிகள் கொண்டது. இதன் முதன் தலைவர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு.

இந்திய மொழிகளில் இலக்கியப் பணிகளை ஆதரவுடன் ஒருங்கிணைப்பது; எந்த ஓர் இந்திய மொழியில் இயற்றப்பட்ட இலக்கியமும் மொழிபெயர்ப்பு வாயிலாக நாட்டின் எல்லா மொழி வாசகருக்கும் எட்டச் செய்வது - இவையே அக்காதெமியின் செயல் திட்டங்கள்.

அக்காதெமியின் வெளியீடுகள் பெரும்பாலும் இந்திய மொழிகளில் உள்ளவையே. அதன் ஆங்கில மொழி வெளியீட்டுத் திட்டம் பொதுவாக இந்திய ஆசிரியர் மற்றும் இலக்கியம் பற்றித் தகவல் தரும் நூல்களை வெளியிடுவதேயாகும்.